


## புதிய குஸ்தி சேம்பியன் சூப்பர் எம்

பம்பாய், நவம்பர் 1994 எங்கள் விசேஷ நிருபர்: "ஹா! கடைசியில் என் சூப்பர் சக்தி அவனுக்கு புரிஞ்சிடுச்சு" என்று கர்ஜனை செய்தவாறு சொன்னான் சூப்பர் எம். சீறும் சுல்தானைக் கீழே தள்ளி கடைசியாக எண்ணும் வரை அழுத்திப்பிடித்து புதிய குஸ்தி சேம்பியன் ஆனான் சூப்பர் எம். வெற்றியடைந்த ஆனந்தத்தில் ஒரு சூப்பர் மில்க் பிஸ்கட் பேக்கட்டை எடுத்து அதிலுள்ள பிஸ்கட்டை எடுத்து சாப்பிட்டான் சூப்பர் எம். பிறகு கண்ணை சிமிட்டியவாறு தன் ரசிகர்களிடம் சொன்னான் "பாவம், அவனுக்கு சூப்பர் மில்க் பிஸ்கட்டின் சூப்பர் சக்தி, சூப்பர் சுவையைப்பத்தி ஒண்ணும் தெரியாது. தெரிந்திருந்தால்......" தொடர்ந்து சூப்பர் எம் சொன்னான் "அடுத்தடவை நன்னா தயார் பண்ணிக்க. அப்புறம் சண்டை போட வா... **சேலஞ்சுடன்**".




சூப்பர் சக்தி. சூப்பர் சுவை. சூப்பர் மில்க் பிஸ்கட்




பார்லே

everest/94/PP/138-tm

# BAND-AID®

# Funtest

## ஒவ்வொரு பேண்ட்-எய்ட் ஃபன்டெஸ்ட் பேக்குடன் இரண்டு ஃபன்ஸ்டிக்ஸ்* இலவசம்.




## உங்கள் ஃபன்ஸ்டிக்குகளை* சேகரிக்க ஆரம்பியுங்கள் இப்போதே!

* நறுமணம்கொண்ட ப்ளாஸ்டிக் க்ரேயான்கள்

**நிபந்தனைகள் :**

1. இப்போட்டியில் 4 முதல் 15 வயது வரையுள்ள குழந்தைகள் கலந்து கொள்ள முடியும். இந்திய பிரஜைகள் மட்டுமே பங்கேற்க முடியும்.
2. ஜான்ஸன் & ஜான்ஸன் மற்றும் ஒகில்வி & மேதர் நிறுவனங்களின் ஊழியர்கள் மற்றும் அவர்களின் உறவினர்கள் இப்போட்டியில் பங்கேற்க முடியாது.
3. ஒரு தனிநபர் எவ்வளவு நுழைவுப் படிவங்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
4. ஒவ்வொரு நுழைவுப்படிவமும் முழுமையாக நிறைவு செய்யப்பட வேண்டும். முழுமையாக நிறைவு செய்யாத அல்லது தெளிவில்லாத நுழைவுப் படிவங்கள் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டா.
5. நுழைவுப் படிவங்கள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி 28 பிப்ரவரி 1995. ஆனால் கடைசி தேதியை நீடிக்கும் அல்லது முன்னாலேயே முடிவுறச் செய்யும் உரிமையை நிறுவனம் தன்னிடம் வைத்துக் கொள்கிறது.

# மங்கை

டிசம்பர் '94



ஆன்மிகப் புதிர் பரிசு ரூ.1000/-

கவிதைப் புதிர் பரிசு ரூ.500/-

மங்கை மருத்துவ முகாம், சமையல்-வீட்டுக் குறிப்புகள், மற்றும் வித்தியாசமான பகுதிகளுடன்.

விலை ரூ.6/-




# அம்புலிமாமா

நிறுவனர் : 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி

## சிறுவர் வேலைக்கு முடிவு



தீபாவளி வந்து போயிற்று. இயற்கையின் சீற்றம், தொத்து நோய் பயங்கரம் என்றெல்லாம் இருந்தும் மக்கள் இப்பண்டிகையை வழக்கம் போல வாண வேடிக்கைகளுடன் கொண்டாடினார்கள்.

இந்த வாணம், பட்டாசு, மத்தாப்புத் தயாரிப்பில் யார் ஈடுபடுகிறார்கள் என்று எவ்வளவு பேர் நினைத்துப் பார்க்கிறார்கள்? இத்தொழிலில் பாதிக்கும் மேற்பட்டவர்கள் பதினைந்து வயதிற்கும் கீழான சிறுவர் சிறுமியர் என்பதை அறிவார்களா? சிவகாசி போன்ற பட்டாசு தயாரிக்கும் இடங்களுக்குச் சென்று பார்த்தால் இந்த உண்மை விளங்கும்.

பட்டாசு தயாரிப்பில் மட்டுமல்லாது சிறுவர் சிறுமியர் ஜமக்காளம், தோல் பொருட்கள், தீப்பெட்டி தயாரிப்பு, பீடித் தொழில் போன்றவற்றிலெல்லாம் வேலைக்கு அமர்த்தப்படுகிறார்கள். இதுபற்றி யாவரும் பலத்த ஆட்சேபம் தெரிவிக்கவே இப்போது அதிகாரிகளின் கவனம் இதன்பால் திரும்பியுள்ளது.



சிறுவர்களை வேலைக்கு அனுப்புவது ஒரு குடும்பத்தின் பொருளாதார நிலையைப் பொறுத்தது. இவர்களது ஊதியமும் சேர்ந்து குடும்பத்தைக் காக்கிறது என்கிற நிலை உருவாகும் போது யாரைக் குறை கூறுவது?

இது சிறுவர் வேலை பற்றிய பிரச்னை மட்டுமல்ல. மக்கள் பொருளாதார நிலை பற்றியதும் ஆகும். இதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படும் என எதிர்பார்ப்போம்.

மதிமுகம் : 95 டிசம்பர் 1994 புன்னகை : 6

தனிப்பிரதி : ரூ. 5.00 வருட சந்தா : ரூ. 60.00



செய்திகளும் தகவல்களும் :

# ஹெய்டியில் மக்களாட்சி



அக்டோபர் 15ந்தேதி ஹைய்டிக்கு மகிழ்ச்சி தரும் நாள். அந்நாளில் அந்நாட்டின் அன்பிற்குரிய தலைவர் ஜீன் பெர்ட்ரண்ட் அரிஸ்டைட் நாட்டின் தலைமைப் பதவியை ஏற்கத் தம் அயல்நாட்டு வாசத்திலிருந்து ஹைய்டிக்குத் திரும்பி வந்தார். இராணுவ ஆட்சி முறையிலிருந்து மக்களாட்சி முறைக்குக் கொண்டு வர 1991 லிருந்து முயற்சி மேற்கொள்ளப்பட்டது. இராணுவ ஆட்சித் தலைவர் லெப்டினண்ட் ஜெனரல் ராவோல் செட்ரஸை அமெரிக்கா நெருக்கி நிர்பந்தித்தது. அமெரிக்காவின் முன்னாள் ஜனாதிபதி ஜிம்மி கார்டர் மூன்று ஆண்டு காலமாக இம்முயற்சியில் ஈடுபட்டார்.

முதன் முதலில் 1990ல் நடந்த தேர்தலில் ஜனநாயக முறையில் அரிஸ்டைட் நாட்டின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால் ஏழு மாதங்களுக்குப் பின் பதவியிலிருந்து விலக்கப்பட்டார்.

ஐநூறு வருடங்களுக்கு முன் கொலம்பஸ் 1492ல் அமெரிக்காவைக் கண்டுபிடித்த ஆண்டிலேயே ஹைய்டியையும் கண்டுபிடித்தார். அதற்கு அவர் ஹிஸ்பனோலா எனப் பெயரிட்டார். இதற்கு சிறிய ஸ்பெயின் என்று பொருளாம். ஆனால் அத்தீவுவாசிகளான சிவப்பிந்தியர்கள் அதற்கு ஹைய்டி என்று பெயரிட்டனர். இன்று இத்தீவின் மேற்குப் பகுதிக்கு ஹைய்டி என்றும் கிழக்குப் பகுதிக்கு டொமினிகன் ரிப்ளிக் என்றும் பெயர்.

அழகான இந்தத் தீவில் ஸ்பெயினிலிருந்து மக்கள் வந்து குடியேறினர். இவர்கள் அத்தீவிலிருந்த சிவப்பிந்தியர்களை அடக்கினர். 17வது நூற்றாண்டில் இது பிரஞ்சுக்காரர் வசமாகி செழிப்புடன் விளங்கியது. 18ம் நூற்றாண்டின் இறுதியில் நடந்த பிரெஞ்சு புரட்சியின் போது பல பிரெஞ்சுக் குடியேற்ற நாடுகளும் சுதந்திரமடைய முயன்றன. 1804 ஜனவரி 15ல் ஹைய்டி தன்னைச் சுதந்திர நாடெனப் பிரகடனம் செய்தது. 1915ல் இந்நாடு அமெரிக்காவின் ஆட்சியின் கீழ் வந்து இருபது ஆண்டுகள் அதன் ஆட்சியில் இருந்தது. அதன் பின் பல கலகங்கள் ஏற்பட்டு 1957ல் டாக்டர் பிராங்கோயஸ் துவாலியர் ஆட்சிப் பொறுப்பை ஏற்றார். அவர் இறந்தபின் அவரது மகன் ஜீன் க்ளாட் துவாலியர் ஆட்சிக்கு வந்தார். 1986ல் அவர் நாட்டை விட்டுப் போக வேண்டியதாயிற்று. ஜனநாயக ஆட்சியை அளிப்பதாக வாக்குறுதி அளித்த இராணுவத் தலைவர்

லெப்டினண்ட் ஜெனரல் நான்சி அதைக் காக்காததால் 1988ல் பதவி நீக்கம் செய்யப்பட்டார். ஆறு மாத புரட்சிக்குப்பின் அவர் மீண்டும் பதவியைக் கைப் பற்றினார். பெயரளவில் ஜனநாயக முறை இருந்தது. ஆனால் அதிகாரம் முழுவதும் ராணுவத்திடம்தான்.

ஜீன் பெர்ட்ரீண்ட் அரிஸ்டைட் ஒரு ஏழை விவசாயக் குடும்பத்தில் பிறந்தவர். இளம் வயதில் தந்தையை இழந்து தாயுடன் தலைநகர் போர்ட் ஆப் பிரின்ஸிற்கு வந்து கத்தோலிக்கப் பள்ளியில் கல்வி பயின்றார். அதனால் ஏழை எளியவர்களின் கஷ்டநஷ்டங்கள் அவருக்கு நன்கு தெரிய வந்தது. 1988ல் அவர் மதப் பிரசாரகராகி ஏழைகளிடையே வாழ்ந்தார். மக்களிடையே அவருக்கு மதிப்பும் கௌரவமும் ஏற்பட்டது. மக்கள் அவரோடு சேர்ந்து துவாலியர் குடும்ப ஆட்சியை எதிர்த்தனர். இந்த ஆட்சியை முதலில் எதிர்த்த தலைவர் அரிஸ்டைட்.




துவாலியர் 1989ல் பதவி நீக்கம் செய்யப்பட்ட பிறகு அரிஸ்டைட் ஜனநாயக ஆட்சியைக் கொண்டுவரப் பாடுபட்டார். ஆனால் அவரது அரசாங்க எதிர்ப்பை சர்ச் நிர்வாகம் கண்டித்தது. 1990ல் தேர்தல் நடக்கும் என அறிவித்தபோது அது ஒழுங்காக நடக்காது என எண்ணி அரிஸ்டைட் முதலில் அதை பகிஷ்கரிக்க நினைத்தார். ஆனால் அதில் போட்டியிட்டுப் பெரும்பான்மை பலம் பெற்றார்.

அதிபர் அரிஸ்டைட் இடதுசாரி என்பது நாடறிந்தது. அதனால் அவரது கொள்கைகளும் திட்டங்களும் அமெரிக்காவுக்குப் பிடிக்கவில்லை. அதனால் சிலர் சதி செய்து 1991ல் அவரைப் பதவியிலிருந்து விரட்டினார்கள். இதன் பின் இராணுவ ஆட்சி ஏற்பட்டது. அப்போது முதல் ஜனநாயக ஆட்சியைக் கொண்டு வர அமெரிக்கா முயன்று இராணுவத் தலைவர்களை நயத்தாலும் பயத்தாலும் நெருக்கியது.

அமெரிக்க அதிபர் பில் கிளின்டன் செப்டம்பர் 15 வரை ஹைய்டி ராணுவத் தலைவர்களுக்கு கெடு வைத்தார். ஹைய்டியை ஆக்கிரமிக்கப் போவதாக எச்சரித்தார். அமெரிக்காவில் தஞ்சம் புகுந்த அரிஸ்டைட் க்ளின்டனுக்குத் தன் ஆதரவைத் தெரிவித்தார். ஹைய்டியுடன் நடந்த பேச்சு வார்த்தைகள் பயனளிக்கவில்லை. செப்டம்பர் 19ல் அமெரிக்கப் படை ஹைட்டியில் இறங்கவே அத்தீவு மக்கள் பயந்து நாட்டை விட்டு ஓடலாயினர். ஜெனரல் செட்ரஸ் தன் ஆட்சி அட்டூழியங்களுக்கு நீதி விசாரணைக்கு உட்படுவதாகக் கூறிப் பதவி விலகச் சம்மதித்தார்.

அரிஸ்டைட் ஹைட்டி திரும்பி வந்தார். அவருக்கு 21 குண்டு மரியாதை செலுத்தப்பட்டது. அமைதிக்காகப் பாடுபட்ட அமெரிக்காவுக்கு ஹைட்டி நன்றி செலுத்துவதாக அரிஸ்டைட் கூறினார்.





# அகந்தை அழிந்தது!

மரகதபுரியின் இளவரசி ரத்தினாங்கி. அவள் மிகவும் அழகானவள் என்றாலும் கர்வம் மிக்கவள். பல கலைகளிலும் சிறந்து விளங்கித் தனக்கு நிகர் யாருமில்லை என்று எண்ணி வந்தாள்.

அவளது அகங்கார குணம் அவளது தந்தைக்கு கவலையை அளித்தது. மன்னன் தன் மகளிடம் கர்வம் கொண்டு துள்ளாதே என்று கூறியும் அவளது கர்வம் குறையவில்லை. மேலும் அதிகரிக்கலாயிற்று.

இந்நிலையில் வீரபுர மன்னன் வீரசேனன் மரகதபுரி மன்னனுக்கு ஒரு கடிதம் அனுப்பினான். அதில் தான் ரத்தினாங்கியை மணக்க விரும்புவதாகவும் உடனே முகூர்த்தத்தைக் குறித்து அனுப்ப வேண்டும் என்றும் அவன் எழுதி இருந்தான்.

வீரசேனன் பலமிக்கவன். அவன் எழுதியபடி நடக்காவிட்டால் தன் நாட்டின் மீது படை எடுத்து வருவான் என மரகதபுரி மன்னன் பயந்தான். அதைத் தன் மகளிடம் கூறி "நீ வீரசேனனை மணந்து கொள்" எனச் சொன்னான்.

ஆனால் ரத்தினாங்கியோ "முடியாது. வீரசேனனுக்கு என்ன அவ்வளவு கர்வம்! நான் என்னை மணக்கப் போகிறவரைப் பார்க்க வேண்டாமா? அவர் எப்படிப்பட்டவர் என்று தெரிந்து கொள்ள வேண்டாமா? யாரோ பயமுறுத்துகிறார் என்பதற்காக அவரை நான் மணக்க முடியாது" என்று பட்டென்று கூறி விட்டாள்.

மரகதபுரி மன்னனுக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை. அச்சமயத்தில் வித்தியாநாதர் என்ற மகான் அவனது அரண்மனைக்கு வந்தார். அவரது குருகுலத்தில் பல அரசகுமாரர்கள் கல்வி கற்றவர்கள்.

-பாபநாசம் சாமா-



அவரிடம் மரகதபுரி மன்னன் தன் பிரச்சினையைக் கூறவே அவரும் "கவலைப்படாதே. இதை நான் தீர்த்து வைக்கிறேன்" என்றார்.

அவர் ரத்தினாங்கியைக் கண்டு "பெண்ணே! நான்கு நாட்களுக்கு முன் நான் வீரசேனனுடன் பேசிக் கொண்டிருந்தேன். அவனுக்கு கர்வம் கொஞ்சமும் இல்லை. அவன் உன் அறிவாற்றலையும் அழகையும் கேள் விப்பட்டு உன்னை மணக்க விரும்பி முறைப்படி உன் தந்தைக்குக் கடிதம் எழுதியதாக என்னிடம் கூறினான். உன்னைப் பெரிதும் மதிக்கிறான். எனவே நீ இந்த அரிய வாய்ப்பை இழந்து விடாதே" என்றார்.

ரத்தினாங்கியும் "அவருக்கு என்னைப் பிடித்திருக்கலாம். ஆனால் எனக்கு அவரைப் பிடிக்கவில்லை" என்றாள். வித்தியாநாதரும் "பெண்ணே! அவசரப்பட்டு முடிவுக்கு வராதே. நான் ஒரு வழி சொல்கிறேன். நீ என் ஆசிரமத்திற்கு வா. அங்கு வீரசேனனையும் வரச் சொல்கிறேன். நீ அவனைப் பார்த்து அவன் நடவடிக்கைகளைக் கண்டு விட்டு ஒரு முடிவுக்கு வா. அவன் கர்வமிக்கவன் என நீ நினைத்தால் அவனை மட்டந்தட்டி இனியும் பெண் களைத் துச்சமாக நினைக்காதே என்று அவனுக்கு அறிவுறுத்து" என்றார்.

ரத்தினாங்கியும் அவர் கூறியதை ஏற்றுத் தன் தோழி சரஸாவுடன் வித்தியாநாதரின் ஆசிரமத்திற்குச் சென்றாள். வித்தியாநாதரும் வீர சேனனை உடனே தன் ஆசிரமத்திற்கு வரும்படித் தகவல் அனுப்பவே அவனும் மறுநாளே வந்து சேர்ந் தான்.

வித்தியாநாதர் கூறி இருந்தபடி ரத்தினாங்கி சரஸாவை அரசகுமாரி போல் அழகுபடுத்தி ஆடைகளை அணிவித்துவிட்டுத் தான் அவளது தோழி போல எளிய தோற்றத்தில் இருந்தாள். வீரசேனன் வந்து அவர் களைப் பார்த்தபோது அரசகுமாரி போல ஆடைகளை அணிந்திருந்த சரஸாவையே ரத்தினாங்கி என்று நினைத்து விட்டான்.

அவன் அவளிடம் "நான் இப்

போதுதான் முதல் தடவையாக உன்னைப் பார்க்கிறேன். நீதான் எவ்வளவு அழகாக இருக்கிறாய்! நீயும் வெட்கப்படாமல் என்னைப் பார். என்னை உனக்குப் பிடித்திருந் தால் நான் உன்னை மணந்து கொள் கிறேன். பிடிக்காவிட்டால் இந்தத் திருமணம் வேண்டாம் என்று உன் தந்தைக்குத் தெரிவித்து விடுகிறேன்" என்றான்.

அவளருகே தோழியாக இருந்த ரத்தினாங்கி தன்னை வீரசேனன் ஏறெடுத்துக் கூடப் பார்க்க வில்லையே என்று ஏங்கினாள். அவள் சட்டென எழுந்து அங்கிருந்து செல்லவே வீரசேனன் அதைக் கூட கண்டு கொள்ளவில்லை. சரஸா வுடன் அவன் பேசிக் கொண்டே இருந்தான்.

வேகவேகமாக வந்த ரத்தினாங் கியை வித்தியாநாதர் கண்டார். அவர் "எங்கே போகிறாய்? வீரசேனனைப் பார்க்கவில்லையா?" என்று கேட்டார். அவளும் "அந்த வீரசேனர் சர ஸாவை அரசகுமாரி என நினைத்து அவளுடனேயே பேசிக் கொண்டிருக் கிறார். என்னைப் பார்க்கக் கூட இல்லை" என்றாள்.

வித்தியாநாதரும் "ஆமாம்! இப் போது சரஸாவைப் பார்த்தால் உன்னை விட அழகாகத்தான் தென் படுகிறாள்" என்றார். ரத்தினாங்கியும் "அதற்குக் காரணம் என் விலையு யர்ந்த ஆடைகளும் நகைகளுமே" என்றாள். அப்போது அவர் "ஓ! அழகு என்பது ஆடை ஆபரணங்





களைப் பொறுத்துத்தான் இருக்கிறதா? அப்படியானால் சிலர் தான் தான் அழகு என ஏன் நினைக்கிறார்கள் என்று எனக்குப் புரியவில்லை" என்றார்.

ரத்தினாங்கியும் "அழகை மேலும் அழகாக்க அரச குடும்பத்தினரால் தான் முடியும். அரச குடும்பத்தில் பிறக்க அதிர்ஷ்டம் இருக்க வேண்டும். அது எல்லோருக்கும் கிடைத்து விடாது" என்றாள். இதுகேட்டு வித்தியாநாதர் பலமாகச் சிரித்து "வீரசேனன் இப்போது சரஸாவை மணந்து கொண்டால் என்னவாகி விடும்? அவள் அரச குடும்பத்தைச் சேர்ந்தவள் என்றுதானே ஆகும்?" என்றார்.

அதுகேட்டு ரத்தினாங்கி "ஆமாம். நான் தவறு செய்து விட்டேன். இப்போதே போய் வீரசேனரிடம் உண்மையைக் கூறி விடுகிறேன்" என்று துடித்தாள். வித்தியாநாதரோ "வேண்டாம். நீ அப்படிச் செய்தால் வீரசேனனுக்கு கோபம்தான் வரும். எனவே நீ வாய் திறக்காதே. நான் எல்லாவற்றையும் சமாளிக்கிறேன்" என்று கூறி அவளை அழைத்துக் கொண்டு வீரசேனனும் சரஸாவும் இருக்கும் இடத்திற்குச் சென்றார்.

அப்போது வீரசேனன் சரஸாவிடம் "ராஜகுமாரி! நான் இவ்வளவு நேரமாகப் பேசிக் கொண்டே இருக்கிறேனே. நீ ஒரு வார்த்தை கூடப் பதில் கூறவில்லையே" என்றான். அப்போது வித்தியாநாதர் குறுக்கிட்டு "அவள் ராஜகுமாரியாக இருந்திருந்தால் பதில் சொல்லி இருப்பாள். அவள் ரத்தினாங்கியின் தோழி சரஸா. என்னருகில் இருப்பவள் தான் அரசகுமாரி ரத்தினாங்கி" என்றார்.

வீரசேனன் திடுக்கிட்டு ரத்தினாங்கியைப் பார்த்தான். அவள் நாணித் தலை குனிந்து நின்றாள். வீரசேனனோ "இதென்ன நாடகம்?" என்று உறுமினான். வித்தியாநாதரோ "நாடகமும் இல்லை. ஒன்றுமில்லை. சரஸா அரசகுமாரியின் ஆடைகளையும் நகைகளையும் ஒரு முறையாவது அணிந்து பார்க்க வேண்டுமென்று ஆசைப்பட்டுக்

கொண்டிருந்தாள். அது அரண்மனையில் இருக்கும்போது நடக்க முடியாது. எனவே இங்கே வந்ததும் அவள் தன் ஆசையை ரத்தினாங்கியிடம் தெரிவித்தாள். ரத்தினாங்கியும் அவள் விருப்பத்தை நிறைவேற்றினாள். சரஸா இந்த வேஷத்தில் இருந்தபோது நீ வந்து அவளை அரசகுமாரி எனத் தவறுதலாக எண்ணிப் பேசிக் கொண்டிருந்தாய். ரத்தினாங்கிக்கு நீ இங்கே வரப் போவது கூடத் தெரியாது" என்றார்.

வீரசேனனும் "என் தவறை அப்போதே சுட்டிக்காட்டி இருந்தால் இந்த நிலை ஏற்பட்டிராதே" என்று சலித்துக் கொண்டே கூறினான். அவரும் "நீ சொல்வதும் சரியே. அதனால்தான் ரத்தினாங்கி சட்டென எழுந்தோடி வந்து என்னிடம் விஷயத்தைக் கூறினாள். சரஸாவோ என்ன செய்வதெனத் தெரியாமல் திக்குமுக்காடிக் கொண்டிருக்கிறாள். உன்னால் இவர்களில் யார் உண்மையான அரசகுமாரி எனக் க்ண்டு கொள்ளக் கூட முடியவில்லையே. நீ புற அழகைக் கண்டு அவசரப்பட்டு மயங்கி விட்டாய். இதற்கு யாரைக் குறை கூறுவது?" என்று கேட்டார்.

வீரசேனனுக்குத் தன் தவறு புரிந்தது. அவன் மெதுவாக ரத்தினாங்கியை அணுகி "நான் என்னை மிஞ்சியவன் யாருமே இல்லை என்று கர்வப்பட்டுக் கொண்டிருந்தேன். அதனால் உன் விருப்பத்தைக் கூட அறிந்து கொள்ள முயலாமல்



உன்னை மணக்கப் போவதாக உன் தந்தைக்குக் கடிதம் எழுதினேன். என்னை மன்னித்து விடு. நான் உனக்கு ஏற்றவனல்ல. இதை உன் தந்தைக்கும் தெரிவிக்கிறேன்" என்றான்.

ரத்தினாங்கியும் "அதுதான் சரி. என்னைவிட அழகான சரஸா இருக்கும் போது நானும் உங்களுக்கு ஏற்றவள் அல்ல" என்றாள். வீரசிம்மனும் "ஒரு தோழிக்கு உன் ஆடைகளையும் நகைகளையும் அணிவித்து நீ அவள் பக்கம் தோழியாக நின்றாயே! இந்தப் பரந்த நோக்கம் யாருக்கு வரும்? இவ்வளவு உயரிய குணம் படைத்த உனக்கு நான் ஏற்றவனல்ல" என்று கூறினான்.

ரத்தினாங்கி ஏதோ சொல்லப் போன போது வித்தியாநாதர் குறுக்கிட்டு "நீங்கள் இருவரும் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொண்டீர்கள். இனி உங்கள் அரண்மனைகளுக்குச் செல்லுங்கள். இனி உங்கள் திருமணத்தை நடத்தி வைப்பது என் பொறுப்பு" என்றார்.

வீரசேனன் வித்தியாநாதரை வணங்கி விடை பெற்றுக் கொண்டு தன் நாட்டிற்குச் சென்றான். ரத்தினாங்கியோ "அவர் எளிமையையும் பணிவையும் விரும்புகிறார் போலத் தெரிகிறது" என்றாள். வித்தியாநாதரும் "ஆம். வீரசேனன் உன் பணிவையும் அழகையும்தான் போற்றினான். இதே குணம் உன்னிடம் நிரந்தரமாக இருந்துவிட்டால் பிரச்னை தீர்ந்தது. சரஸாவைப் பற்றி யோசிக்காதே. அவள் உங்கள் நாட்டு சேனாதிபதியின் மகனை விரும்புவது எனக்குத் தெரியும். இப்போது கர்வம் உன்னையும் வீரசேனனையும் விட்டொழிந்தது. இதற்காகத்தான் உங்கள் இருவரையும் இங்கு வரச் செய்தேன்" என்றார்.

ரத்தினாங்கி அவரது கால்களில் விழுந்து வணங்கினாள். அன்று முதல் அவள் பணிவுக்கு முன்மாதிரியாக விளங்கினாள். அவளுக்கும் வீரசேனனுக்கும் திருமணம் நடந்ததைக் கூறவும் வேண்டுமா?





# புவனசுந்தரி

## 2

*(ட்ராய் மன்னன் வர்த்தனனுக்கு மோகன் என்ற ஆண் குழந்தை பிறந்தது. அக் குழந்தையால் நாட்டிற்கே கேடு விளையும் என்றறிந்த அம்மன்னன் அக்குழந்தையைக் கொன்று விடும்படித் தன் மாடு மேய்ப்பவனிடம் கொடுத்தான். அவனோ அக்குழந்தையைக் கொல்லாமல் அதனை வளர்த்து வந்தான். ஒரு முறை மூன்று தேவதைகள் யார் மிக அழகானவள் என்று மோகனிடம் கேட்க அவன் காமினி என்ற தேவதையே மிக அழகானவள் என்று தீர்ப்புக் கூறினான். அதன் பிறகு-)*

**வ**ர்த்தனன் மோகனைக் கொல்ல உத்திரவு கொடுத்த பிறகு அவனது நினைவு நாளை ட்ராய் நகரில் ஆண்டு தோறும் கொண்டாடி வந்தான். மோகன் காமினியை அழகி எனத் தேர்ந்தெடுத்த சில நாட்களுக்குப் பின் அந்த ஆண்டு நினைவு நாள் வந்தது. ஈடா மலையில் அதற்கான போட்டிகள் ஆரம்பமாயின.

அப்போட்டிகளில் யார் வேண்டுமானாலும் கலந்து கொள்ளலாம் என மன்னன் வர்த்தனன் அறிவித்தான். அதில் காளைகளை அடக்கும் போட்டியும் ஒன்று. அதற்கான காளைகள் இரண்டைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு வருமாறு தன் மாடுகளை மேய்ப்பவனுக்கு மன்னன் கட்டளை இட்டான்.

மோகன் அதுவரை அம்மாதிரிப் போட்டிகளைக் கண்டதில்லை. அத

னால் தான் ட்ராய் நகருக்குப் போய்ப் போட்டிகளைப் பார்க்க வேண்டும் எனப் பிடிவாதம் பிடித்தான். அது கண்டு மாடு மேய்ப்பவன் பயந்து போனான். தான் மன்னனின் குழந்தையைக் கொல்லாமல் வளர்த்து வரும் ரகசியம் வெளிப்பட்டு அதனால் என்னென்ன விளைவுகள் விளையுமோ என அவன் அஞ்சினான்.

அவன் மோகனுக்குப் பலவாறு கூறி அவன் ட்ராய் நகருக்குப் போகக் கூடாது என்று சொல்லிப் பார்த்தான். ஆனால் மோகனோ பிடிவாதமாகத் தான் அங்கு போகத்தான் வேண்டும் என்று கூறவே மாடு மேய்ப்பவன் அவனைத் தனியே அனுப்ப விரும்பாமல் மோகனுடன் தானும் சென்றான்.

ட்ராய் நகரில் அந்த நினைவு நாளில் பலவிதமான போட்டிகள் நடக்க ஏற்பாடாகி இருந்தன. அவற்றில் மற்போரும் ஒன்று. வர்த்தன மன்னன் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்க அவன் முன் அப்போட்டி நடக்கும். அதில் பல மற்போர் வீரர்கள் கலந்து கொள்வார்கள். அதில் வெற்றியைப் பெற்றவனுக்கு 'மகுடம்' அளித்து கௌரவிக்கப்படும்.

மோகன் அப்போட்டியில் கலந்து கொள்ளத் தயாரானான். அவனது வளர்ப்புத் தந்தையான மாடு மேய்ப்பவன் தடுத்தும் கேட்கவில்லை. அப்போட்டியில் கலந்து கொண்ட மோகன் எல்லா வீரர்களையும் தோற்கடித்துப் பரிசாக மகுடம் பெற்றான். அதன்பின் ஒட்டப் பந்தயத்தில்



கலந்து கொண்டு அதிலும் எல்லோருக்கும் முன்னதாக வந்து மகுடம் பெற்றான். அடுத்தடுத்து மோகன் இரு மகுடங்களை அடைந்தது வர்த்தனனின் புதல்வர்களின் கண்களை உறுத்தியது.

யாரோ ஒருவன் எல்லாப் பரிசுகளையும் தட்டிச் செல்கிறானே என்று ஆத்திரப்பட்டு அவர்கள் மோகனைத் தம்மோடு குஸ்தி போட அழைத்தனர். மோகன் அச்சவாலை ஏற்று அவர்களோடு குஸ்தி போட்டு எல்லோரையும் தோற்கடித்து மேலும் ஒரு மகுடம் பெற்றான்.

இதைக் கண்ட அரசகுமாரர்கள் கோபம் கொண்டு மோகனைக் கொன்றுவிடத் தீர்மானித்தார்கள். மோகன் தப்பி ஓடி விடாமல் இருக்க இருவர் காவலாகவும் இருந்தார்கள். அவர்கள் வீரசிம்மன், அரிபயங்கரன் என்ற இருவர். இவர்களில் அரிபயங்கரன் என்பவன் மோகனின் கூடப் பிறந்த சகோதரன்தான். இருவரும் ஒரு தாய் வயிற்று பிள்ளைகள். ஆனால் அதை அவர்கள் அறிந்திருக்கவில்லை.

விவகாரம் முற்றியது கண்டு மாடு மேய்ப்பவன் ஓடிப் போய் மன்னனிடம் "அரசே! என்னைக் காப்பாற்றுங்கள். இந்த மோகன் உங்களுடைய மகனே" என உண்மையைக் கூறி விட்டான். மன்னனும் தன் மகன் இறந்து விடாமல் உயிருடன் இருப்பது கண்டு மகிழ்ச்சி அடைந்தான். அவன் மாடு மேய்ப்பவனைக் கோபித்துக் கொள்ளவும் இல்லை.





தன் மகன் உயிரோடு இருக்கிறானே என்று எண்ணி அவன் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்தான். தன் மகன் தன்னிடம் வந்து சேர்ந்ததற்காக அவன் பெரிய விருந்தும் அளித்தான்.

ஆனால் மோகனைப் பற்றி பூசாரிகள் எச்சரித்தும் மன்னன் சற்றும் சட்டை செய்யாமல் "இவ்வளவு அதிசாமர்தியசாலியான என மகனை இழக்கத் தயாராக இல்லை" என்று கூறிவிட்டான். மோகன் மற்ற அரசகுமாரர்களோடு அரண்மனையில் வளர்ந்து வரலானான். அவனது சகோதரர்களுக்கெல்லாம் திருமணமாகி அவர்கள் தம் மனைவியருடன் வாழ்ந்து வந்தனர்.

அவர்கள் மோகனிடம் "நீ மணம் செய்து கொள்ளவில்லையா?" என்று கேட்டனர். மோகன் தினமும் காமினி தேவதையைப் பூசித்து வந்தான். அவன் அவர்களிடம் "என் தேவதை எனக்கு ஏற்ற மனைவியை அளிப்பாள். நான் தேர்ந்தெடுக்க வேண்டிய அவசியம் இல்லை" என்று கூறினான். அவனுக்கு புவனசுந்தரி ஸ்பார்ட்டாவில் இருப்பது தெரியும். அதனால் எக்காரணத்தைக் கூறி ஸ்பார்ட்டாவுக்குப் போவது என அவன் யோசிக்கலானான்.

வர்த்தனனின் தங்கை சுலோசனா. அவளை கிரேக்கர்கள் கவர்ந்து சென்றனர். இது பற்றி யோசிக்க வர்த்தனன் சபையை கூட்டினான். போரா, பேச்சு வார்த்தையா என அதில் விவாதிக்கப்பட்டு முடிவில் சமாதானமாகப் பேசிப் பார்ப்பது என்று முடிவு செய்யப்பட்டது. ட்ராய் நகர தூதர்கள் கிரீஸிற்குப் போய் சுலோசனாவைத் தம்மிடம் ஒப்படைக்கும்படிக் கோரினார்கள். ஆனால் கிரேக்கர்கள் அதற்கு மறுக்கவே பேச்சு வார்த்தை முறிந்தது.

இதனால் வர்த்தனன் மீண்டும் சபையைக் கூட்டவே அதில் கிரேக்கர்களுடன் போர் என்று முடிவு செய்யப்பட்டது. மோகன் கிரேக்கர் மீது படை எடுத்துச் செல்ல தான் தலைமை தாங்குவதாக கூறி "சுலோசனாவை மீட்டு வராவிட்டால் அவளைப் போன்ற மற்றொரு அழகியையாவது அங்கிருந்து கவர்ந்து

வருவேன்" என்று கூறினான்.

இச்சமயத்தில் புவனசுந்தரியின் கணவனான பிரதாபன் ஸ்பார்ட்டாவி லிருந்து ட்ராய் நகருக்கு வந்தான். திடீரெனப் பெரியம்மை நோய் ஸ்பார்ட்டாவில் பரவியதே அதற்குக் காரணம். ட்ராய் நகரிலுள்ள சில தேவதைகளுக்குப் பலி கொடுத்து பூசை செய்தால் பெரியம்மை போய் விடும் என ஸ்பார்ட்டாவில் சிலர் கூறியது கேட்டு பிரதாபன் அங்கு வந்தான்.

மோகன் பிரதாபனுக்கு மரியாதை காட்டி அவனுடன் நட்புறவாடி னான். அவன் ஸ்பார்ட்டாவுக்கு வந்து அங்குள்ள தேவதைகளை தரிசிக்க விரும்புவதாகக் கூறவே, அதுகேட்டு பிரதாபன் மகிழ்ந்து போனான்.

மோகனோடு கிரீஸிற்குச் செல்ல படைகள் தயாராகின. மோகன் கிளம் பும் போது பிரதாபன் உடன் சென் றான். அவர்கள் சில நாட்களில் ஸ்பார்ட்டா நகரை அடைந்தார்கள். மோகன் புவனசுந்தரிக்காகக் கொண்டு வந்த பல பரிசுகளை அவளிடம் அளித்தான். புவனசுந்தரி போன்ற அழகி உலகில் வேறெங்கும் இல்லை என மோகனுக்குத் தெரிந் தது. எனவே காமினி தேவதையின் உதவியுடன் அவளை எப்போது ட்ராய் நகருக்கு அழைத்துப் போவது என்று யோசிக்கலானான்.

காமினி தேவதையின் சக்தியால்



புவனசுந்தரியும் மோகனைக் கண்டது முதல் அவனை விரும்பினாள். ஆனால் அதைத் தன் கணவன் தெரிந்து கொள்ளாதபடி சாமர்த்திய மாக நடந்து வந்தாள்.

மோகன் ஸ்பார்ட்டாவில் பிரதாப னின் விருந்தினனாக ஒன்பது நாட் கள் இருந்தான். அச்சமயம் பிரதாப னின் தாத்தா இறந்து விடவே அவன் அவரது ஈமச் சடங்குகளில் கலந்து கொள்ளச் சென்று விட்டான். அச் சடங்குகள் க்ரீட் தீவில் நடந்து கொண் டிருந்தன. இதெல்லாம் காமினி தேவதையின் செயல் என மோகன் அறிந்து புவனசுந்தரியைத் தன் னோடு வந்து விடும்படி அழைத் தான். அவளும் சம்மதித்தாள்.

அன்றிரவே அவர்கள் இருவரும் ரகசியமாகக் கிளம்பிப் போய் கப்பலில் ஏறினர். கப்பல்கள் எல்லாம் ட்ராய் நகருக்குக் கிளம்பின. மோகன் பல தீவுகளுக்குப் போய்விட்டு வெகு நாட்களுக்குப் பிறகே ட்ராய் நகரை அடைந்தான்.

பிரதாபன் தன் தாத்தாவின் ஈமச் சடங்குகள் முடிந்ததும் ஸ்பார்ட்டாவிற்குத் திரும்பி வந்தான். அப்போது மோகன் செய்த மோச வேலை அவனுக்குத் தெரிந்தது. உடனே அவன் தன் தமையனும் இளவரசனுமானவனிடம் நடந்ததைக் கூறி "ட்ராய் நகரை முற்றுகையிட்டு புவனசுந்தரியை மீட்க வேண்டும்" என்றான்.

அவன் தமையனும் "அவசரப்படாதே. நாம் முதலில் ட்ராய் நகருக்குச் சில தூதர்களை அனுப்பி சமாதானமாகப் பேசிப் பார்பபோம். அவர்கள் நாம் கூறியபடி நடக்காவிட்டால் போர் புரியலாம்" என்றான்.

அவன் அனுப்பிய தூதர்கள் ட்ராய் நகரை அடைந்தபோது மோகனும் புவனசுந்தரியும் அங்கு வந்திருக்கவில்லை. மன்னன் அவர்களிடம் "நீங்கள் கூறுவது எதுவும் எனக்குத் தெரியாது. அப்படியே ஒருவேளை என் மகன் புவனசுந்தரியைக் கவர்ந்து சென்றிருந்தாலும் நான் ஒன்றும் நஷ்ட ஈடு கொடுக்க மாட்டேன். என் தங்கை சுலோசனாவைக் கவர்ந்து சென்ற கிரேக்கர்கள் எனக்கு என்ன கொடுத்தார்கள்?" என்று கேட்டான்.

அதுகேட்டு பதில் பேச முடியாமல் தூதர்கள் திரும்பிச் சென்றார்கள். அதுபற்றி வர்த்தனன் கவலைப்படவில்லை. மோகன் புவனசுந்தரியுடன் ட்ராய் நகரை அடைந்தபோது வர்த்தனன் அவளது அழகைக் கண்டு பிரமித்துப் போனான். ட்ராய் நகரமே அவளது அழகைக் கண்டு வியந்தது. மோகனுக்கும் புவனசுந்தரிக்கும் சிறப்பாக திருமணம் நடைபெற்றது. புவனசுந்தரியைத்தான் கிரேக்கர்களிடம் ஒப்படைக்கப் போவதில்லை என வர்த்தனன் அறிவித்தான்.

(தொடரும்)



# அம்புலிமாமா செய்திகள்

## தண்டனைக்குப் பின் மரியாதை!

உலகில் மிகச் சிறிய நாடு வாடிகன். இதன் முதல் குடிமகன் போப். அண்மையில் 17வது நூற்றாண்டில் வாழ்ந்த புவி இயல் அறிஞர் கெலிலியோவின் நினைவாக இரு தபால் தலைகள் வெளியிடப்பட்டன. இந்தத் தபால் தலைகள் சிறப்புத் தன்மை வாய்ந்தவை. 17வது நூற்றாண்டு வரை கிருஸ்துவப் பாதிரிகள் பூமியைச் சுற்றித்தான் சூரியனும் மற்ற கிரகங்களும் நகர்ந்து செல்வதாகக் கூறி வந்தார்கள். ஆனால் கெலிலியோ அது தவறு என்றும் சூரிய மண்டலத்தில் சூரியனைச் சுற்றித்தான் பூமியும் மற்ற கிரகங்களும் நகர்ந்து செல்கின்றன




என்றும் அடித்துக் கூறினார். கெலிலியோ தாம் கூறியது தவறு என ஒப்புக் கொள்ள வேண்டும் என கத்தோலிக உயர் மன்றம் வற்புறுத்தியது. கலிலியோ அப்படிச் செய்யாததால் கி.பி. 1633ல் அவருக்கு ஆயுள் தண்டனை விதித்தது. அதன் பிறகு வீட்டிலேயே காவல் நிர்பந்தமாக அத் தண்டனையை மாற்றியது. அவர் 1642ல் இறந்தார். பிறகுதான் அவர் கூறியது உண்மை என்பதை உலகம் ஏற்றது. அவர் இறந்து மூன்றரை நூற்றாண்டுகளுக்குப் பின் அதே நாடு அவரை கௌரவித்திருக்கிறது!

## மனிதன் எதிலிருந்து வந்தான்?

தற்போது தொல்பொருளாகக் கிடைத்துள்ள ஒரு பல்லைக் கொண்டு பார்த்தால் மனிதன் சிம்பான்ஜி என்ற பிராணியிலிருந்து தோன்றியவன் என் ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். இந்த வகையில் மனிதக் குரங்கு ஆப்




பிரிக்காவின் எதியோபியாவில் 4,400,000 ஆண்டுகளுக்கு முன் காடுகளில் வாழ்ந்தது எனக் கருதுகிறார்கள். கலிபோர்னியா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டின்வைட் "இந்த தட்ப வெட்ப சூழ்நிலைக் காடுகளில் இப்போதுதான் முதன்முறையாக சிம்பான்ஜியைக் கண்டோம்" என்றார். அவரது ஆய்வின்படி மனிதனும் சிம்பான்ஜியும் நெருங்கிய தொடர்புடையவர்கள் என்றும் கொரில்லாவை விட சிம்பான்ஜியே மனிதன் தோன்றக் காரணம் எனவும் தெரிய வருகிறது.



# யோகி செய்த சூழ்ச்சி

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! உன் விடா முயற்சியைப் பாராட்டுகிறேன். உன்னை இந்தக்கீழ்த்தரமான வேலையைச் செய்ய யாரோ ஒரு மந்திரவாதி தான் ஏவி இருக்கிறான் என்று சந்தேகிக்கிறேன். இது உண்மையானால் இதன் விளைவு பயங்கரமாக இருக்கும். இதனால் உனக்குத் துயரம் மேலிட்டுத் தோல்வியும் கிடைக்கலாம். இதற்கு எடுத்துக்காட்டாக ஜெகவீரன் என்ற அரசகுமாரனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

ஜெயவீரபுரத்தை கஜவீரன் என்ற

## வேதாளம் சொல்லும் கதை



மன்னன் ஆண்டு வந்தான். அவன் மகன் ஜெகவீரன். அவனுக்கு அண்டை நாட்டு மன்னனின் மகள் திலகாவை மணம் செய்து வைக்க கஜவீரன் ஆசைப்பட்டான். ஒரு நாள் ஜெகவீரன் சில வீரர் களோடு காட்டில் வேட்டையாடச் சென்றான்.

உச்சி வேளை வரை வேட்டை யாடிக் களைத்துப் போன ஜெகவீரன் ஒரு குளத்தைக் கண்டு அதன் நீரைப் பருகி அதன் கரையிலிருந்த ஆலமரத்தடியே படுத்து இளைப் பாறினான். சற்று நேரத்தில் அருகி லேயே யாரோ முனகுவது போலக் கேட்கவே அவன் எழுந்து அந்த இடத்திற்கு சென்றான்.

அது ஒரு மலைக் குகை. ஜெக வீரன் தன் வாளை உருவிக் கொண்டு அதனுள் சென்றான். குகைக்குள் ஒரு கிழட்டு சித்த யோகியை அவன் கண்டான். அந்த யோகிதான் முக்கி முனகியவன்.

அவன் ஜெகவீரனைக் கண்டதும் "ஜெகவீரா! நீ சரியான நேரத்தில் வந்திருக்கிறாய். என் வாழ்க்கை முடியப் போகிறது. எனக்குக் கூடு விட்டு கூடு பாயும் வித்தை தெரியும். நான் இறக்கு முன் அதை ஒரு நல்லவனிடம் ஒப்படைக்க நினைத் தேன். உனக்கு அந்த மந்திரத்தை இப்போது உபதேசிக்கிறேன். கவன மாகக் கேட்டு நினைவில் வைத்துக் கொள்" எனக்கூறி மந்திரத்தையும் உபதேசித்தான்.

பிறகு அந்த யோகி "இதை மூன்று தடவை தெளிவாக நான் உச்சரித்தது போலவே உச்சரிக்க வேண்டும். சரி. நீ இப்போது மந்தி ரத்தை உச்சரித்து உன் ஆவியை வெளியே கொண்டு வா. நானும் அதே சமயம் என் ஆவியை வெளியே கொண்டு வருகிறேன். நீ உன் ஆவியை என் உடலில் செலுத்து. நான் என் ஆவியை உன் உடலில் செலுத்துகிறேன்" என்றார்.

ஜெகவீரனும் மந்திரத்தைப் பரீட் சிக்க நினைத்து அதற்கு இணங்கி னான். அவன் மந்திரத்தை உச்சரித் ததும் அவனது உடலிலிருந்து ஆவி வெளியே வந்தது. இதே சமயம்

கிழ யோகியும் தன் உடலிலிருந்து தன் ஆவியை வெளியே கொண்டு வந்தான். ஜெகவீரனின் ஆவி கிழ யோகியின் உடலில் புகுந்தது. கிழ யோகியின் ஆவி ஜெகவீரனின் உடலில் புகுந்தது.



சற்று நேரமானதும் கிழ உடலில் புகுந்த ஜெகவீரன் "ஐயா யோகியாரே! இனி என் உடலை விட்டு வெளியே வாருங்கள். நானும் இந்த உடலிலிருந்து வெளியே வருகிறேன். நீங்கள் முன்போல உங்கள் உடலில் புகுந்து கொள்ளுங்கள். நானும் என் உடலில் புகுந்து கொள்கிறேன்" என்று பணிவுடன் கூறினான்.

அப்போது ஜெகவீரனின் உடலில் புகுந்து கொண்ட யோகி பலமாகச் சிரித்து "அட பைத்தியக்காரா! இனி மேல் நான்தான் இளவரசன். அரசிளங்குமரி திலகாவை மணக்கப் போகிறவன். உன் தந்தையின் நாட்டிற்கு மன்னனாகப் போகிறவன். நீ நன்றாக ஏமாந்தாய். உனக்கு இனி மேல் இந்தக் கிழ உடல்தான்" எனக் கூறி அந்தக் குகையிலிருந்து வெளியே சென்று விட்டான்.

யோகி ஏமாற்றி விட்டான் என்றறிந்த கிழ உடலில் இருந்த ஜெகவீரன் மனமுடைந்து போனான். அவன் மெதுவாக எழுந்து குகைக்கு வெளியே வந்தான். அப்போது தன் உடலில் புகுந்த யோகி வீரர்களோடு சேர்ந்து குதிரை மீதமர்ந்து தலைநகரை நோக்கிச் செல்வதைக் கண்டான். கிழவனாகி விட்ட ஜெகவீரன் தானும் தலைநகரை எப்படியாவது அடைந்து விட வேண்டும் என நினைத்து அங்கிருந்து கிளம்பினான்.

ஆனால் அவனால் வெகுதூரம் நடக்க முடியவில்லை. சற்று தூரம் போனதுமே களைத்துப் போனான். அதனால் அவன் ஒரு மரத்தடியே உட்கார்ந்து விட்டான். அங்கு இறந்து போன ஒரு மயிலின் உடல் கிடந்தது. அந்த உடலுக்குள் தன் ஆவியைப் புகுத்தி வேகமாகத் தலைநகரை அடைந்து விடலாமா என்று கூட அவன் எண்ணினான். ஆனால் சற்று யோசித்துப் பார்த்து அவன் அவ்வாறு செய்யவில்லை.



அப்போது ஒரு பயணி குதிரை மீதமர்ந்து வருவதைக் கிழ ஜெகவீரன் கண்டான். தன்னருகே வந்ததும் அவனை வற்புறுத்தித் தன்னை ஜெய வீரபுரத்தில் கொண்டு போய் விடும் படி அவன் வேண்டினான். அந்தப் பயணியும் அவனுக்கு உதவி குதிரை மீது அவனைத் தன் பின்னால் உட் கார வைத்துச் சற்று நேரத்தில் தலைநகர எல்லையை அடைந்து அங்கு கிழ ஜெகவீரனை இறக்கி விட்டுச் சென்றான்.

கிழ ஜெகவீரன் இனி என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கையில் ஒரு சிலர் ஒரு பிணத்தைத் தூக்கிக் கொண்டு வந்து ஒரு பள்ளத்தில் இறக்கி ஒப்பாரி வைத்துக் கதறிக் கதறி அழுவதை அவன் பார்த்தான். அந்த உடல் ஒரு வாலிபனுடையது. உடனேயே சற்றும் யோசியாமல் அவன் மந்தி ரத்தை மூன்று முறை உச்சரித்து அந்த வாலிபனின் உடலில் தன் ஆவியைப் புகுத்தி விட்டான்.

மறுநிமிடமே இறந்து போன உடல் உயிர்பெற்று எழுந்து உட்கார்ந் தது. அதுகண்டு அதைச் சுற்றி நின் றவர்கள் "ஐயோ! இதென்ன அதி சயம்! இறந்த ஊமை லோக நாதனின் உடல் எழுந்து உட்கார்கிறதே" என்று கூவி பயந்து அங்கிருந்து ஓடி விட் டார்கள். அப்போதுதான் ஜெகவீர னுக்குத் தான் புகுந்தது ஒரு ஊமை யின் உடல் என்று தெரிந்தது. அதை நினைத்து ஜெகவீரன் பெரிதும் வருந்தினான். அப்போது அவன் தன் விரலில் ஒரு தங்க மோதிரம் இருப்பது கண்டு அது தன் அதிர்ஷ் டமே என்று எண்ணிச் சற்று ஆறுதல் அடைந்தான்.

அவன் அந்த மோதிரத்தை ஒரு நகைக் கடையில் விற்று நல்ல உயர் ரக ஆடைகளையும் ஒரு குதிரையை யும் வாங்கிக் கொண்டான். அவன் அந்த ஆடைகளை அணிந்து குதிரை மீதேறி அண்டை நாட்டின் தலை நகரை அடைந்தான். அது திலகா வின் தந்தையின் நாடு. "அவன் கோட் டைக் காவலாளிகளிடம் ஒரு விஷ யத்தை மன்னரிடம் அவசரமாக தெரி விக்க வேண்டும்" என்று சைகையால்

உணர்த்தினான். அவர்களும் உடனே அவனை மன்னன் மார்த்தாண்டன் முன் கொண்டு போய் விட்டார்கள்.

அப்போது மார்த்தாண்ட மன்னன் ஆஸ்தான ஜோதிடரான ஞான மணியுடன் பேசிக் கொண்டிருந்தான். ஜெகவீரன் தான் காட்டில் ஒரு கிழ யோகியால் ஏமாற்றப்பட்டதைச் சைகையால் அவர்களுக்குச் தெரிவித் தான். மன்னனுக்கு அது புரிய வில்லையாயினும் ஆஸ்தான ஜோதி டர் அவன் கூறியது என்ன என்று மன்னனிடம் விளக்கினார்.

அதைக் கேட்ட மார்த்தாண்டன் ஜெகவீரனுக்கு மோசக்கார யோகி செய்த கீழ்த்தரமான செய்கையை ஒரு கடிதத்தில் விவரமாக எழுதி ஜெயவீரபுர மன்னனான கஜவீர னுக்கு அனுப்பினான். அக்கடிதத் தைப் படித்த கஜவீரன் கோபம் கொண்டு தன் வீரர்களிடம் "இப் போது ஜெகவீரனாக அரண்மனை யில் திரிபவன் உண்மையில் ஜெகவீரனல்ல. யாரோ ஒரு மாயாவி. அவனைப் பிடித்து உடனே சிறை யில் அடையுங்கள்" என்று கட்டளை இட்டான்.

இதை அறிந்த மாயாவி யோகி அந்த வீரர்களிடம் "என் தந்தை மூளை குழம்பிக் கிடக்கிறார். அவ ரைச் சங்கிலியால் பிணைத்து அந்த அறையில் வைத்து பூட்டி விடுங்கள். அவரை என்ன செய்வது என்பது பற்றி யோசித்து முடிவு செய்கிறேன்" என்றான். இதையெல்லாம் கவனித்த மார்த்தாண்டனின் தூதன் தன் நாட்





டிற்கு விரைந்து சென்று நடந்ததைக் கூறினான்.

அது கேட்டு மார்த்தாண்டன் தன் நண்பனான கஜவர்மனை அந்த மோசக்கார யோகியிடமிருந்து காப்பாற்ற ஜெயவீரபுரத்தின் மீது படை எடுத்துச் செல்வது என்று தீர்மானித்துத் தன் படைகளையும் தயாராக்கினான்.

ஆனால் ஜெயவீரபுரத்தில் ஓரிரவு மாயாவி யோகி இளவரசன் தூங்கிக் கொண்டிருந்தபோது அவனை ஒரு விஷப்பாம்பு கடிக்கவே அவன் இறந்து போனான். இதனால் கஜ வீரன் விடுதலை அடைந்தான். அவன் அந்த மாயாவி யோகி ஜெகவீரனை ஏமாற்றியதை நாடெங்கிலும் பறை சாற்றுவித்து அறிவித்தான். இதே சமயம் ஊமை லோகநாதனின் உடலில் இருந்த ஜெகவீரன் ஜெய வீரபுரத்திற்கு வந்தான். மக்கள் அவனை வரவேற்றார்கள்.

அரண்மனையில் தன் படுக்கை யறையில் கிடைக்கும் தன் உடலைக் கண்டு ஊமையின் உடலில் உள்ள ஜெகவீரன் கண்ணீர் வடித்தான். பிறகு சைகை செய்து தன் தாய்தந்தை யரிடம் அந்த உடலுக்கு ஈமச்சடங்கு களைச் செய்யும்படிக் கூறினான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னா! ஜெகவீரன் ஆரம்பத்தி லிருந்து செய்து வந்த ஒவ்வொரு செயலும் அர்த்தமற்றது போல இல் லையா? மாயாவி யோகியால் ஏமாற்ற பட்டபின் ஜெகவீரன் வழியில் கண்ட மயிலின் உடலில் தன் ஆவியைப் புகுத்தித் தலைநகருக்கு வந்து தன் தந்தையிடம் விஷயத்தைச் சொல்லி இருக்கலாமே. அவ்வாறு செய்யாமல் வழியில் இறந்து கிடந்த ஒரு ஊமை யின் உடலில் தன் ஆவியைப் புகுத்தி யது சரியான செயலா? மேலும் படுக்கையறையில் கிடந்த தன் உட லுக்கு ஈமச் சடங்குகளை செய்யச் சொன்னது அறிவற்ற செயல்தானே! ஜெகவீரன் தான் கூடுவிட்டுக் கூடு பாயும் வித்தையைக் கற்ற பின் முத லில் மாயாவி யோகியின் உடலிலும் பிறகு ஊமை லோகநாதன் உடலிலும் தன் ஆவியைச் செலுத்தியவனா யிற்றே! இப்படி இருக்க அவன்

ஏன் தன் ஆவியை ஊமை லோக நாதனின் உடலிலிருந்து மாயாவி யோகி புகுந்திருந்த தன் உடலுக்குள் தன் ஆவியை ஏன் செலுத்தவில்லை? ஒரு வேளை அவன் தான் கற்ற கூடுவிட்டுக் கூடுபாயும் மந்திரத்தை மறந்து விட்டானா? எனது இந்த சந் தேகங்களுக்குச் சரியான விடைகளை நீ தெரிந்திருந்தும் கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்" என்றது.

அப்போது விக்கிரமனும் "ஜெக வீரன் கூரிய அறிவு படைத்தவன். அதனால்தான் அவன் நிதானம் இழக்காமல் செயல்பட்டிருக்கிறான். அவன் இறந்த மயிலின் உடலில் தன் ஆவியைப் புகுத்தி இருந்தால் பேசும் சக்தியை இழந்திருப்பான். நகர எல்லையில் அவன் ஒரு இளைஞ னின் உடலில் தன் ஆவியைச் செலுத் தியதும் சரியான செயலே. ஏனெனில் அவன் அதுவரை மாயாவி யோகி யின் உருவில் இருந்தான். அந்த உருவில் அவனை அரண்மனையி லுள்ள போலி ஜெகவீரன் கண்டால் அவனை உடனே கொன்று விடு வானே அதனால் அவன் முதலில் கண்ட ஊமை லோகநாதனின் உட லில் புகுந்து கொண்டான். ஆனால் அவன் அப்போது லோகநாதன் ஊமை என அறிந்திருக்கவில்லை. அதன் பிறகு அவனால் மந்திரத்தைத் உச்சரிக்க முடியவில்லை. அதனால் தான் பாம்பு கடித்து இறந்து கிடந்த தன் உடலின் தன் ஆவியை அவ னால் செலுத்த முடியவில்லை. அதனால்தான் அவ்வுடலுக்கு ஈமச் சடங்குகள் செய்து விடும்படித் தன் தந்தையிடம் சைகையால் கூறினான். எனவே அவன் செய்து வந்த ஒவ் வொரு செயலும் விவேகம் நிறைந் ததே" என்றான்.

விக்கிரமனின் இந்த சரியான பதில்களால் அவன் மௌனம் கலை யவே அவன் சுமந்த வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# தவறுதான்!

சிவபுரி ஆஸ்தானத்தில் சிவஞானம் என்ற மாபெரும் பண்டிதர் இருந்தார். அவர் மற்ற கவிஞர்களின் நல்ல படைப்புகளைப் போற்றிப் பாராட்டி வந்தார். ஆனால் ஆஸ்தான பண்டிதர் அச்சுதராமனோ எல்லாக் கவிஞர்களையும் இகழ்ந்தும் தன்னைவிட்டால் மகாபண்டிதர் யாருமே இல்லை என்றும் கூறிக் கர்வப்பட்டுக் கொண்டிருந்தார்.

சிவஞானரோ யார் அச்சுதராமனைப் பற்றிக் கேட்டாலும் அவர் மகா பண்டிதர் என்றே கூறி வந்தார். ஆனால் அச்சுதராமனோ சிவஞானம் ஒரு ஞான சூன்யம் என்று கூறி இகழ்ந்தே வந்தார்.

இதைக் கண்ட மன்னன் ஒரு நாள் சிவஞானத்தை தர்பாருக்கு அழைத்து வரச் சொல்லி அவரிடம் "நீங்கள் என்னமோ அச்சுதாராமரைப் புகழ்ந்து கொண்டே இருக்கிறீர்கள். ஆனால் அவரோ உங்களை இகழ்கிறாரே. இது ஏன்?" என்று கேட்டார்.

சிவஞானமும் "இலக்கிய விஷயங்களில் எங்கள் கருத்து மாறுபட்டிருந்தாலும் இதுவரை நாங்கள் ஒருவரையொருவர் பற்றிக் கொண்டிருந்த கருத்து சரியே என எண்ணி இருந்தேன். இப்போது அது முற்றிலும் தவறு என்று தெரிகிறது" என்றார்.

அதுகேட்டு சபையிலிருந்த அச்சுதராமர் அவமானத்தால் தலை குனிந்து கொண்டார்.



## நாவல் மரம்

திருச்சிக்கருகேயுள்ள திருஆனைக்காவிலுள்ள ஜம்புகேசுவர ஆலயம் புகழ்பெற்ற சிவன் கோவில். இக்கோவிலிலுள்ள நாவல் மரம் கோவிலில் பந்தல் போட்டது போல வளர்ந்திருப்பது இதன் சிறப்பாகும். சிவபிரானுக்கு மட்டுமல்லாமல் நாவல் மரம் விநாயகருக்கும் கிருஷ்ண பரமாத்மாவிற்கும் பிரியமானது என ஹிந்துக்கள் கருதுகிறார்கள். மேகங்களின் அதிபதி நாவல் மரமாக அவதரித்ததால் இதன் பழங்கள் கருப்பாக உள்ளதாக ஒரு கதை உண்டு. கிருஷ்ண பரமாத்மா கூட நாவல் பழ நிறத்தவர் என பக்தர்கள் வ்ாணிக்கிறார்கள். பெளத்தர்களும் நாவல் மரத்தைப் புனிதமாகக் கருதுகிறார்கள்.

எப்போதும் பச்சைப் பசேலென உள்ள நாவல் மரம் உயரமாக வளர்கிறது. மரத்தின் அடிப்பாகம் பருமனாய் வளராமல் கிளைகள் ஆங்காங்கே நீண்டதாக இருக்கும். நாவல் மரங்களை நம் நாட்டின் எப்பகுதியிலும் காணலாம். இவை பூத்துக் காய்க்கும் போது தட்பவெப்பம் சீராக இருக்க வேண்டும். இவை மார்ச்–மே மாதங்களில் பூக்க ஆரம்பிக்கும். இலைப் பச்சை, வெள்ளை நிற மலர்கள் கொத்துக் கொத்தாய்ப் பூக்கும். பழங்கள் கருப்பு நிறத்தில் பளபளவென மின்னும். பழச்சாறு சிவப்பு. நீல நிறத்தில் இருக்கும். நாவல் பழம் குளிர்ச்சியைத் தரும். ஜீரணசக்தியை அதிகரிக்கும் இப்பழங்களும் இதன் கொட்டைகளும், இலைகளும் பட்டைகளும் மருந்துகளில் உபயோகப் படுத்தப்படுகின்றன. இதன் கலவை உறுதியாக இருப்பதால் இதனைப் படகுகள் தயாரிப்பிலும் உபயோகிக்கிறார்கள்.






# ஆதி கவிஞர் வால்மீகி

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் நம் நாடு காடுகள் நிறைந்ததாக இருந்து. ஓரிடத்திலிருந்து வேறிடம் போவதானால் ஏதாவது ஒது காட்டைக் கடந்தேயாக வேண்டும். அதனால் அக்காலத்தில் திருடர், வழிபறியாளர்களின் பயம் இருந்தது.

ஒருமுறை ஒரு முனிவர் ராம நாமம் ஜெபித்தவாறே ஒரு காட்டின் வழியே சென்று கொண்டிருந்தார். அப்போது ஒரு முரடன் கோடாலியுடன் அவரை வழி மறித்து "உன்னிடமுள்ளதையெல்லாம் மரியாதையாகக் கொடுத்துவிட்டுப் போ" என்று உறுமினான். முனிவரோ "நீ எவ்வளவு காலமாக இப்படி வழிப்பறி செய்து வருகிறாய்? எதற்காக?" என்று கேட்டார்.

முரடனும் "பல வருடங்களாக. வேறு எதற்கு? என் மனைவி மக்களைக் காப்பாற்றத்தான்" என்றான். முனிவரும் "இது பாவச் செயலாயிற்றே. இதன் பலனை முழுவதும் நீ ஏற்பாயா அல்லது உன் குடும்பத்தவரும் ஏற்பார்களா?"என்று கேட்டார். முரடனும் " என் செயலின் பொறுப்பை என்னோடு என் குடும்பத்தவரும் ஏற்கத்தான் ஏற்பார்கள். இதில் என்ன சந்தேகம்?"என்று கேட்டான்.

முனிவரோ சிரித்து "அவர்கள் ஏற்க மாட்டார்கள். நீ போய் அவர்களைக் கேட்டு வா. நான் இங்கேய இருக்கிறேன்" என்றார். முரடன் தன் வீட்டிற்குப் போய் "நான் செய்யும் பாவத் தொழிலால் கிடைக்கும் பாவத்திற்கு நீங்களும் பங்கு ஏற்பீர்கள் அல்லவா?" என்று கேட்டான். அவர்களோ "அதெப்படி? எங்களைக் காக்க வேண்டியது உன் பொறுப்பு. நீ பாவத் தொழிலிசெய்தால் அதன் முழுப் பொறுப்பும் உன்னுடையதே. நாங்களா உன்னை பாவத்தொழிலைச் செய்யச் சொன்னோம்?" என்றார்கள்.

அது கேட்டு அந்த முரடன் திகைத்துப் போனான். அங்கிருந்து அவன் ஓடி வந்து முனிவரின் கால்களில் விழுந்து "என்னை இந்தப் பாவத்திலிருந்து காப்பாற்றுங்கள்"என்று வேண்டினான். முனிவரும் அவனுக்கு ராம நாமத்தை உபதேசித்து "பக்தி சிரத்தையுடன் நீ எப்போதும் உச்சரித்துக் கொண்டே இருந்தால் நீ செய்த பாவங்களெல்லாம் போய் விடும்" என்றார். அவனும் அப்போதே ஒரு மரத்தடியில் அமர்ந்து ராமநாமத்தை ஜெபிக்கலானான்.

பல ஆண்டுகளுக்குப் பின் அந்த முனிவர் அதே வழியில் வந்தபோது ஒரு மரத்தின் கீழிருந்த மண்புற்றிலிருந்து ராமநாமம் ஒலிப்பதைக் கேட்டார். அவர் அப்புற்றை உடைக்கவே அதிலிருந்து சடைமுடியுடன் ஒரு முனிவர் வெளிவரக் கண்டார். அந்த முனிவர் ஒரு காலத்தில் முரடனாக இருந்து வழிப்பறி செய்தவன்தான். அவன் பெயர் ரத்னாகரன். ஆனால் இப்போது மண்புற்றிலிருந்து வந்தவராதலால் வால்மீகி என்ற பெயர் பெற்றார். வன்மீகம் என்றால் மண்புற்று என்று பொருள்.

வால்மீகி முனிவர் தமஸா நதிக் கரையில் ஆசிரமம் அமைத்து இருந்து வந்தார். ஒரு நாள் அவர் அந்நதியில் நீராடிவிட்டுத் தன் ஆசிரமத்திற்குத் திரும்பி வருகையில் ஒரு ஜோடி கிரௌஞ்சப் பட்சிகளைப் பார்த்தார். அப்போது எங்கிருந்தோ வந்த ஒரு வேடனின் அம்பு அவற்றில் ஒன்றில் பாய ஒரு பட்சி இறந்து வீழ்ந்தது. மற்ற பட்சி அது கண்டு துடி துடித்தது.

இதைக் கண்ட வால்மீகி அத்துயரத்தை சுலோக வடிவில் வெளிப்படுத்தினார். இப்படியாக அவர் ஆதிகவி எனப் பெயர் பெற்றார். அவர் இயற்றிய சுலாகங்களே இராமாயணம் அது சம்ஸ்கிருத மொழியின் மிகச் சிறந்த காவியம். அது பலமொழிகளில் வெளி வந்துள்ளது.

பக்தி சிரத்தையுடன் முழு முயற்சியுடன் ஈடுபட்டால் எந்த ஒரு மனிதனும் மிக உயர்ந்தவனாகிவிடலாம் என்பதற்கு வால்மீகி முனிவரின் வாழ்க்கையே ஒரு எடுத்துக் காட்டாகும்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. மெட்ரிக் முறையைக் முதலில் கையாண்ட நாடு எது?
2. நம் நாட்டில் தேவதைப் பள்ளத்தாக்கு எங்கு உள்ளது?
3. அலெக்ஜாண்டர் மன்னன் சிறுவனாக இருந்தபோது அவனுக்குக் கொடுக்கப்பட்ட குதிரையின் பெயர் என்ன?
4. நம் நாட்டில் 'பிங்க் சிடி' என எந்த ஊருக்குப் பெயர்?
5. "ஜுடோ' சண்டையைக் கண்டு பிடித்தவர் யார்?
6. நாட்டியக் கலையை விவரிக்கும் புகழ் பெற்ற நூல் எது? அதன் ஆசிரியர் யார்?
7. எஜமானர்களே அடிமைகளுக்கு உணவு பரிமாறும் பழங்கால ரோமன் பண்டிகை எது?
8. பூஜ்யத்தைக் கண்டுபிடித்த இந்தியக் கணித மேதை யார்?
9. சுகாதாரத் தபால் தலைகளை வெளியிடும் நாடு எது? அதன் சிறப்பு என்ன?
10. பூமி சூரியனை ஒருமுறை சுற்றிவர எவ்வளவு காலம் ஆகிறது?
11. ஜப்பானின் மிகப் பழைய நூல் எது?
12. இந்தியாவிற்கு வந்த முதல் அமெரிக்க ஜனாதிபதி யார்?
13. உலகின் மிகப் பெரிய புத்தகாலயம் எது?
14. டோக்கியோ நகரின் முந்தையப் பெயர் என்ன?
15. கெலிலியோ முதன் முதலில் கண்டுபிடித்தது எது?
16. தன் நாட்டு வரைபடத்தையே தன் தேசிய கொடியில் கொண்டுள்ள நாடு எது?

## விடைகள்

1. பிரான்ஸ்
2. ஹிமாசல் பிரதேச கூலு பள்ளத்தாக்கு
3. பூசிவலஸ்
4. ராஜஸ்தான் தலைநகர் ஜெய்பூர்
5. டாக்டர் ஜுகோரோகோனோ 1882-ல்
6. நாட்டிய சாஸ்திரம், பரதமுனி
7. சாடர்னாலியா
8. ஆர்யபட்டர்
9. நியூஜிலாந்து அதன் வாயிலாகக் கிடைக்கும் பணத்தை சுகாதார அமைப்புகளுக்குக் கொடுக்கிறது.
10. 365 நாட்கள், 5 மணி, 48 நிமிஷம், 46 நொடி
11. கோஜிகிக்
12. ஐசன்ஹோவர் 1956-ல்
13. மாஸ்கோவின் லெனின் ஸ்டேட் லைப்ரரி.
14. ஈடோ
15. பெண்டுலம்
16. சைப்ரஸ்



# பணக்காரன் தூக்கம்!

வேம்பூரில் வேலய்யன் பெரும் பணக்காரன். ஒரு கோடை நாளன்று மத்தியானத்தில் அவனால் தூங்க முடியவில்லை. வேலைக்காரர்கள் விசிறி வீசினார்கள். அறைச் சன்னல்களில் வெட்டி வேர்த் தட்டிகளைக் கட்டித் தண்ணீர் தெளித்தனர். அப்போதும் கோடையின் கடுமை தணியவில்லை. அவனுக்குத் தூக்கமும் வரவில்லை.

ஆனால் அதே சமயம் அவனது சில வேலைக்காரர்கள் ஆங்காங்கே படுத்து நிம்மதியாகத் தூங்குவதை அவன் கண்டான். அதனால் ஆத்திரம் கொண்டு அவன் அவர்களை எழுப்பி "என்ன இது! உங்கள் எஜமானனான நான் தூங்க முடியவில்லை. என்னிடம் சம்பளம் வாங்கும் நீங்கள் நன்றாகத் தூங்குவதா?" என்று கோபித்துக் கொண்டான்.

இதுபோலத் தூங்கும் தன் மனைவி மக்களையும் அவன் விட்டு வைக்கவில்லை. தனக்குத் தூக்கம் இல்லாதபோது தன்னை அண்டிப் பிழைப்பவர்கள் நன்றாகத் தூங்குவது அவனுக்கு எரிச்சலையே தந்தது.

வேலய்யனுக்குத் தூக்கம் வராமலிருக்க வேறு ஏதாவது காரணமோ என நினைத்து சிலர் வைத்தியர்களை அழைத்து வந்தார்கள். வைத்தியர்கள் அவனது உடலைப் பரீட்சித்துப் பார்த்து விட்டு "இவரது உடலில் எந்தக் குறையும் இல்லை. மனதில் தான் கோளாறு" என்று கூறிவிட்டுப் போனார்கள்.

அப்போது வேறு சிலர் "இது நோயாக இல்லாவிட்டாலும் ஏதாவது பேய் பிசாசு இவரைப் படித்திருக்கலாம்" என எண்ணி ஒரு மந்திரவாதியை அழைத்து வந்தார்கள்.

-சு.கி. சுவாமி-



அவனும் பூசை போட்டுத் தாயத்துக் கட்டினான். அப்போதும் எந்தப் பலனும் ஏற்படவில்லை.

இந்த நிலையில் வேலய்யன் வீட்டிற்கு ஒரு யோகி வந்தார். அவர் வேலய்யனின் நிலையை அறிந்து கொண்டு அவனிடம் "நீ பணம் சம்பாதிப்பதிலேயே குறியாக இருக்கிறாய். வாழ்க்கை நிலையற்றது. ஒரு நாள் உன் வாழ்வும் அழியும் என்பதை மறந்துவிடாதே" என்றார்.

வேலய்யன் "இதெல்லாம் எனக்கும் தெரியும்" எனவே யோகியும் "கடவுள் இரவு, பகலைப் படைத்தார். பகல் வெளிச்சத்தில் வேலை செய்து இரவில் ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும். அப்போது தான் ஒருவனுக்கு நல்ல தூக்கம் வரும். தூக்கம் ஒரு மனிதனுக்கு மிகவும் தேவை. சரியான தூக்கம் இல்லா விட்டால் மனிதனுக்கு நிம்மதி இல்லை" என்றார்.

வேலய்யனும் "இதெல்லாம் எல்லோருக்கும் தெரிந்த விஷயம்தான். இதைப் போய் எடுத்துச் சொல்கிறீர்களே. எனக்கு ஏன் தூக்கம் வரவில்லை. என் கீழ் வேலை செய்பவர்களுக்கும் என்னை அண்டி இருப்பவர்களுக்கும் எப்படி நல்ல தூக்கம் வருகிறது. இதற்கு என்ன காரணம்?" எனவே யோகியும் "ஒரு விஷயத்தை புரிந்து கொண்டவனால் நன்றாகத் தூங்க முடியும். சற்று நேரம் கவலைகளை மறந்திருந்தால் ஒருவனுக்குத் தூக்கம் வந்து விடும்" என்றார்.

அது கேட்டு வேலய்யன் "அது என்னால் முடியாதே! என்னால் எவ்வளவு பேர்கள் வாழ்கிறார்கள். அவர்களது சுகத்திற்காக நான் கவலைப்பட்டுத்தானே ஆக வேண்டும்? அதனால் ஒரு விநாடியைக் கூட வீணாக்காமல் பணம் சம்பாதிக்கிறேன்" என்றான்.

அப்போது யோகி "உனக்கு எப்போது பார்த்தாலும் பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற கவலையே அதிகமாக இருக்கிறது. அதனால் உன் மனம் ஒரு நிமிடம் கூட நிம்மதியாக இருப்பதில்லை. உனக்கு

நிம்மதிதான் தேவை. இதெல்லாம் சொன்னால் புரியாது. என்னோடு வா. உனக்கு ஒருவனைக் காட்டு கிறேன். அப்போது விளங்கும்" என் றார்.

வேலய்யனும் யோகியின் சீடன் போல வேடமணிந்து அவரோடு சென்றான். இருவரும் அண்ணா மலை என்பவனின் வீட்டிற்குச் சென் றார்கள்.

அண்ணாமலை அவர்களை வர வேற்று உணவளித்தான். அப் போது யோகி "எப்படி இருக்கிறாய்?" என்று கேட்டார். அவனும் "எப்போதும் போலத்தான். என் தாயார் வைத்தியத் திற்கு ஏகப்பட்ட செலவு. என் மனைவி அவளுக்கு இரவு பகலாகப் பணிவிடை புரிந்தும் அவள் திருப்திப் படாமல் வாய்க்கு வந்தபடி பேசு கிறாள். மாமியார் மருமகள் சண்டை தினந்தோறும் நடக்கிறது. என் மூத்த மகனோ பொறுப்பில்லாமல் ஊர் சுற்றுகிறான். இரண்டாவது மகனுக் குப் படிப்பே ஏறவில்லை. இந்த வருடம் விளைச்சல் வேறு சரி யில்லை. ஏதோ கடனோ வுடனோ வாங்கிக் காலம் தள்ளுகிறேன்" என் றான்.

"இதையெல்லாம் தீர்க்க வழிச் செய்வதுதானே?" என்று யோகி கேட்க அவனும் "நானும் என்னால் முடிந்தவரை செய்கிறேன். பணம் சம்பாதிக்க அங்கும் இங்கும் ஓடித் தான் பார்க்கிறேன். ஏதோ கிடைக்கிற



தென்றால் அது குடும்பச் செலவுக் குப் போதவில்லை. அதற்காக என்ன செய்வது? நான் செய்ய வேண்டிய முயற்சியைச் செய்தாகி விட்டது. இனி கடவுள் விட்ட வழி" என்றான். அப்போது உச்சிப் பொழுது கடந்து விட்டது. அப்போது அண்ணாமலை "எனக்கு ஒரு முக்கியமான வேலை உள்ளது. நான் போய் அதைச் செய்து விட்டு வந்து விடுகிறேன். அதுவரை நீங்கள் இங்கேயே இருங் கள் "என்று சொல்லி விட்டுக் கிளம் பிச் சென்றான்.

யோகியும் வேலய்யனும் அவனுக் குத் தெரியாமலேயே அவனைப் பின் தொடர்ந்தார்கள். ஊருக்கு வெளியேயுள்ள ஒரு மாந்தோப்பிற்



குள் போய் அண்ணாமலை ஒரு மரத்தின் கீழ் துண்டை விரித்துப் படுத்தான். மறு நிமிடமே அவன் நன்கு தூங்கலானான்.

அதைக் கண்ட வேலய்யன் யோகியிடம் "பார்த்தீர்களா! இவனுக்கு எவ்வளவு பிரச்னைகள் உள்ளன. அவற்றைத் தீர்க்கப் பணம் சம்பாதிக்காமல் நேரத்தை வீணாக்கித் தூங்குகிறானே. நான் போய் எழுப்பி வேலை செய்யச் சொல்கிறேன்" என்றான்.

யோகியும் சிரித்தவாறே" அவனோ நன்கு தூங்குகிறான். நீயோ எழுப்புவதாகச் சொல்கிறாய். உன் இஷ்டம் போலச் செய்" என்றார், வேலய்யன் அண்ணாமலையை எழுப்பப் போனபோது ஒரு மனிதன் வேகமாக வந்து அவனைத் தடுத்தான். வேலய்யனோ "என்னை ஏன் தடுக்கிறாய்? இவனுக்கோ ஏகப்பட்ட பிரச்னைகள். அவற்றையெல்லாம் தீர்க்க இவனுக்கு நிறையப் பணம் வேண்டும். அதைச் சம்பாதிக்க இவன் நேரத்தை வீணாக்காமல் உழைக்கத்தானே வேண்டும். அப்படி உழைக்காதிருக்கும் இந்த சோம்பேறியை வேலை செய்ய எழுப்புகிறேன்" என்றான்.

அந்த மனிதனோ "இவனா சோம்பேறி! இவன் இரவில் இரண்டு கடைகளில் கணக்கு எழுதுகிறான். அதனால் இரவில் வெகுநேரம் விழித்திருக்க வேண்டி இருக்கிறது. அதன் பிறகு வீட்டிற்குப் போய் நோயாளியான தன் தாய்க்குப் பணி புரிகிறான். அதனால்தான் பகலில் இங்கு வந்து சற்று நேரம் படுத்துத் தூங்குகிறான். அதுவும் வயலில் வேலை இல்லாத போதுதான். இவன் தூக்கத்தைக் கலைப்பது சரியல்ல" என்றான்.

அது கேட்டு வேலப்பன் "இவனைப் பற்றி இவ்வளவு விவரமாகக் கூறுகிறாயே. யாரய்யா நீ? என்று கேட்டான். அந்த மனிதனும் "இவன் என் வயலில் வேலை செய்பவன். எனக்குச் சரியாகத் தூக்கம் வருவதில்லை என்றாலும் இவன் நன்றாகத் தூங்குகிறானே என்பதைப் பார்த்து நான் திருப்தி அடைகிறேன்" என்றான்.

"இதனால் உனக்குத் தூக்கம் வரு

கிறதா? நன்கு தூங்க முடிகிறதா?" என்று வேலப்பன் கேட்க அந்த மனிதனும் "ஒருவனுக்குத் தூக்கம் வருவது அவனது மனநிலையைப் பொறுத்தது. மனதில் நிம்மதி இருந்தால் நல்ல தூக்கம் வரும். அப்படி நிம்மதி பெற நான் முயன்று கொண்டிருக்கிறேன்" என்றான்.

அதுகேட்டு வேலப்பன் "நீ இப்படியே எவ்வளவு நாட்களுக்கு அண்ணாமலை தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டிருக்கப் போகிறாய்?" என்று கேட்டான். அந்த மனிதனும் "உனக்கு நல்ல தூக்கத்தின் அருமை தெரியாது போலிருக்கிறது. நல்ல தூக்கம் கிடைக்க அதிர்ஷ்டம் இருக்க வேண்டும். எனக்கு நல்ல தூக்கம் வராது போனாலும் நன்றாகத் தூங்கும் ஒரு அதிர்ஷ்டக்காரனைக் கண்டு மகிழ்கிறேன். எனவே இவன் தூக்கத்தை யாரும் கலைத்து விடக் கூடாதென்று காவலாகவும் இருந்து வருகிறேன்" என்றான்.

அதைக்கேட்ட வேலப்பனுக்கு அப்போது தன் தவறு தெரிந்தது. தான் தூங்க முடியவில்லை என்பதற்காகப் பிறர் தூக்கத்தைக் கெடுப்பதில் மன நிம்மதி கிடையாது என்பதை அவன் புரிந்து கொண்டான். தன் மனம் நன்றாக இருந்தாலே நிம்மதி பெற்று தான் நன்கு தூங்க முடியும் என்பதையும் அவன் தெரிந்து கொண்டான்.

அவன் தன்னையும் அண்ணாமலையின் எஜமானனையும் ஒப்பிட்டுப் பார்த்து அவன் எவ்வளவு உயர்ந்தவன் என்பதைக் கண்டான். அவன் அந்த மனிதனைப் பாராட்டினான். யோகிக்கும் தன் அறியாமையைப் போக்கியதற்கு அவன் நன்றி செலுத்தி விட்டுத் தன் வீட்டிற்குத் திரும்பிச் சென்றான்.

அன்று முதல் வேலப்பன் யாரையும் கடிந்து கொள்ளாமல் நிம்மதியாக இருக்க விட்டுத் தானும் நிம்மதி பெறலானான். இது அவனது புதிய வாழ்வின் ஆரம்பம்.






# இழந்த வாய்ப்பு!

ஒரு கிராமத்தில் கண்ணன் என்ற வாலிபன் இருந்தான். அவனுக்குத் தாய் தந்தையர் இல்லை. உற்றார் உறவினர் யாரும் இல்லை இருக்க இடமும் இல்லை. ஆனால் நன்கு உழைப்பவன்.

அவனது நிலையைக் கண்டு ஒரு நாள் ஊர்ப் பிரமுகர்கள் பிள்ளையார் மேடையில் கூடி "இந்தக் கண்ண னுக்கு வாழ ஒரு வழி செய்வோம். இவன் இந்த ஊரிலுள்ள எல்லா வீடுகளுக்கும் ஆற்றிலிருந்து தண்ணீர் எடுத்து இரண்டு குடம் வீதம் தின மும் கொடுக்க வேண்டும். இவனுக் குச் சாப்பாடு தினமும் ஒரு வீட்டில். முறை போட்டுக் கொண்டு கொடுப் போம்" என்று முடிவு செய்தார்கள்.

கண்ணனும் அந்த ஏற்பாடு குறித்து மகிழ்ந்து தினமும் ஒவ் வொரு வீட்டிற்கும் ஆற்றிலிருந்து தண்ணீர் எடுத்து வந்து கொடுத்து முறைப்படி ஒவ்வொரு வீட்டில் சாப் பிட்டு வந்தான். தண்ணீர் குடங்கள் இரண்டை ஒரு உறுதியான மூங்கி லின் இருமுனைகளில் கட்டி காவடி போல ஆற்றிலிருந்து அவற்றில் நீர் நிரப்பிக் கொண்டு வந்து கொடுக்க லானான்.

ஒருநாள் மாலை ஊர்ப் பிரமுகர் கள் பிள்ளையார் கோவில் மேடையில் கூடிப் பேசிக் கொண்டிருந்தனர். கண்ணன் ஒரு ஓரமாக நின்று அதைக் கேட்டுக் கொண்டிருந்தான். அப்போது ஒரு பிரமுகர் "நம் ஊர்க் கோவிலில் ஒரு கல்லில் ஒரு அதிசய மான செய்தி பொறிக்கப்பட்டிருப்ப தைக் கவனித்தீர்களா? அதில் நம்மூர் கோவிலிலுள்ள சிவலிங்கத்திற்கு நம் மூர் ஆற்றிலிருந்து நூற்றைம்பது குடம் நீர் எடுத்து வந்து அபிஷேகம் செய்பவன் சக்கரவர்த்தியாவான் என் றிருக்கிறது. இதை நான் நம்ப

-சு.சோபினி-

வில்லை. நீங்கள் நம்புகிறீர்களா?" என்று கேட்டார்.

அநேகமாக அங்கு கூடி இருந்த எல்லோரும் அதை நம்பவில்லை. ஓரிருவர் மட்டும் அது உண்மையாக இருக்கலாம் என்று கூறினர். அப்போது ஒருவர் "இது மட்டும் உண்மையாக இருந்திருந்தால் இதைப் படித்துப் பார்த்தவர்கள் எல்லாம் அவ்வாறு செய்திருப்பார்களே! அதனால் எவ்வளவோ பேர்கள் சக்கரவர்த்திகளாக ஆகி இருக்கலாமே. அப்படி யாரும் ஆனதாகத் தெரியவில்லையே" என்றார். அப்போது பலர் "எனவே கல் வெட்டில் உள்ளது உண்மையில்லை என்று தெரிந்துவிட்டது" எனக் கூறினர். சற்று நேரத்திற்குப்பின் எல் லோரும் கலைந்து சென்றனர்.

கண்ணன் அது பற்றி யோசித்தான். "இதுவரை யாரும் கல்வெட்டில் கூறியபடி சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்ததாகத் தெரியவில்லை. நான் நாளை நூற்றைம்பது குட நீர் கொண்டு போய் அபிஷேகம் செய்து பார்க்கிறேன். கிடைத்தால் சக்கரவர்த்திப் பதவி. அப்படிக் கிடைக்காவிட்டாலும் சிவனுக்கு அபிஷேகம் செய்து புண்ணியமாவது எனக்குக் கிடைக்கட்டுமே" என்று எண்ணினான்.

மறுநாள் அவன் வீடுகளுக்குத் தண்ணீர் கொண்டு போய் விடாமல் கோவில் சிவலிங்கத்திற்கு நூற்றைம்பது குட நீர்விட்டு அபிஷேகம் செய்து சக்கரவர்த்திப் பதவியை அடைவது



எனத் தீர்மானித்து ஆற்றிலிருந்து நீர் கொண்டு வரலானான். தான் தினமும் ஆற்றிலிருந்து நீர் சுமந்து ஊராருக்குக் கொடுத்து வந்ததால் தன்னால் வெகுசுலபமாக நீரை எடுத்து வந்து அபிஷேகம் செய்து விட முடியும் என்று கூட அவன் நினைத்தான்.

ஆனால் அவன் நினைத்தது போல அவ்வளவு எளிதாக இருக்கவில்லை. நூறு குடங்கள் எடுத்துப் போய் அபிஷேகம் செய்வதற்குள் களைத்துப் போய் விட்டான். ஆயினும் மனம் தளர்ந்து விடாமல் தள்ளாடியவாறே மேலும் நாற்பது குடங்களையும் எடுத்து வந்து அபிஷேகம் செய்தான். இன்னும் பத்துக் குடங்களே எடுத்து வரவேண்டும்.

கண்ணன் மிகவும் களைத்துப் போய் விட்டான். ஆனாலும் பல்லைக் கடித்துக் கொண்டு தட்டுத் தடுமாறி மேலும் எட்டுக் குடங்கள் நீர் எடுத்து வந்து அபிஷேகம் செய்துவிட்டுச் சுற்றிலும் பார்த்தான். சக்கரவர்த்தி அமரும் சிம்மாசனமாவது கண்ணில் படுகிறதா என்று சுற்றிலும் பார்த்தான். ஒன்றும் தென்படவில்லை.

அப்போது அவன் "கல்வெட்டில் உள்ளது பொய்யே. நான் இவ்வளவு சிரமப்பட்டது வீணே. நான் மீத இரண்டு குடநீர் கொண்டு வந்து குடத்தோடு சிவலிங்கத்தின் மீது போடுகிறேன்" என எண்ணி அவ்வாறே லிங்கத்தின் மீது போட்டான்.

மறுநிமிடமே சிவலிங்கம் வெடித்தது. சிவபிரான் தோன்றி "அட முட்டாளே! உன் இந்தத் தகாத செயலால் நீ சக்கரவர்த்தியாகும் வாய்ப்பை இழந்து விட்டாய். இங்கிருந்து போய் விடு" என விரட்டினார். கண்ணன் தன் அவசரபுத்தியை நினைத்து வெட்கப்பட்டுத் தலை குனிந்தவாறே கோவிலுக்கு வெளியே வந்தான்.

மறுவிநாடியே கோவிலிலிருந்த லிங்கமும் அந்தக் கல்வெட்டும் மாயமாய் மறைந்து போயின.





# மகாபாரதம்

**பா**ண்டு மன்னன் தன் மனைவியர்களான குந்தியை மாத்ரியையும் அழைத்துக் கொண்டு காட்டில் திரிந்து வேட்டையாடி உல்லாசமாகப் பொழுதைக் கழித்துக் கொண்டிருந்தான். ஒருநாள் ஓரிடத்தில் இரு மான்கள் சேர்ந்திருக்கையில் அவன் அம்பை எய்தான். அது அவற்றைப் படுகாயப்படுத்தியது. உண்மையில் அவை மான்களல்ல. கிந்தமர் என்ற முனிவர் தம் மனைவி யோடு அந்த நிலையில் இருந்தார்.

மரண அடிபட்ட அவர் பாண்டுவைப் பார்த்து "நீ உன் மனைவியைச் சேர விரும்பினால் உடனே இறந்து போவாய்" என்று சபித்து விட்டு உயிர் துறந்தார். அவரது மனைவியும் உடனே இறந்து போனாள்.

பாண்டு தன் செய்கைக்கு மிகவும் வருந்தினான். சாபத்திற்கு விமோசனம் கூட அம் முனிவரிடமிருந்து பெற முடியாமல் போய் விட்டது. அவன் விரக்தியடைந்து துறவியாகி விட எண்ணித் தன் மனைவிகளிடம் கிந்தம முனிவரின் சாபம் பற்றிக் கூறி "நீங்கள் ஹஸ்தினாபுரத்திற்குப் போய் பீஷ்மரிடமும் விதுரரிடமும் திருதராஷ்டிரரிடமும் இதைத் தெரிவித்து விடுங்கள்" என்றான்.

அவர்களோ ஐயோ! உங்களை விட்டுப் பிரிந்து இருப்பதா? எங்களால் முடியாது. உங்களது சுகதுக்கங்களில் பங்கு கொள்ள வேண்டியவர்கள் நாங்கள். அதனால் நீங்கள்



அரண்மனையில் இருந்தாலும் சரி காட்டில் இருந்தாலும் சரி. நாங்கள் உங்களுடன் தான் இருப்போம்" என்று தாம் தம் கணவரை விட்டுப் பிரிந்திருக்க முடியாது என்று ஒரே யடியாகக் கூறிவிட்டார்கள். அதனால் பாண்டு அவர்களைத் தன்னோடு இருக்க அனுமதிக்க வேண்டியதாயிற்று. அவர்கள் தாம் அணிந்திருந்த பட்டாடைகளைக் களைந்து விட்டு மரவுரிகளை அணிந்தனர். தம்முடன் வந்த வீரர்களை ஹஸ்தினாபுரத்திற்குத் திருப்பி அனுப்பி விட்டார்கள். அவர்கள் ஓரிடத்தில் நிலைத்து இராமல் பல மலைகளில் தங்கியவாறே முடிவில் சதசிருங்க பர்வதத்தை அடைந்தார்கள். அங்கு பல முனிவர்கள் இருக்கவே அவர்களோடு சேர்ந்து பாண்டு தவம் செய்யலானான்.

மகப்பேறு பெறாதவன் என்ன தான் தவம் செய்தாலும் சொர்க்க லோகம் அடைய முடியாதே என்பது பாண்டுவின் மனத்தை உறுத்தியது. அவனால் தம் மனைவிகளால் புத்திரர்களைப் பெற முடியாது. அதற்குக் காரணம் கிந்தமரின் சாபமே. பாண்டு தன் கவலையை குந்தியிடம் கூறி "எனக்கோ கிந்தமரின் சாபம் உள்ளது. எனவே எனக்குக் குழந்தைகள் பிறக்க வாய்ப்பே இல்லாது போயிற்று. புத்திரன் என்பவன் பிறந்தால்தான் அவன் தன் தந்தையைப் 'புத்' என்ற நகரத்திலிருந்து காப்பாற்றுவான். எனக்கு அந்த அதிர்ஷ்டம் இல்லையே" என்று புலம்பினான்.

குந்தியும் "கவலைப்படாதீர்கள். சிறுவயதில் எனக்கு துர்வாசர் ஒரு மந்திரத்தை உபதேசித்தார். நான் எந்த ஒரு தேவனை நினைத்துக் கொண்டு அந்த மந்திரத்தை உச்சரித்தால் அந்த தேவனின் அருளால் எனக்கு ஒரு குழந்தை பிறக்கும். அது நம் குழந்தையாகி விடும்" என்றாள்.

அதுகேட்டு பாண்டு மகிழ்ந்து "ஆகா! நம் பிரச்னை தீர்ந்தது. இனி எனக்குக் கவலை இல்லை. நான் இறந்தால் நற்கதி பெற எனக்குப் புதல்வர்கள் பிறக்கப்போகிறார்கள்.

நீ மந்திர சக்தியால் நல்ல புதல்வர் களையே பெற வேண்டும். நீ தர்ம தேவனான எமனை நினைத்து நமக்கு தர்மவானாக ஒரு புத்திரன் வேண் டும் எனக் கேள்" என்றான். குந்தியும் எமதர்மனை நினைத்து மந்திரத்தை உச்சரித்தாள். எமதர்மனும் காட்சி யளித்து அவளுக்கு அருள் புரிய குந்தி கர்ப்பவதி ஆனாள்.

இச்சமயம் காந்தாரியும் கர்ப்ப முற்று ஓராண்டாகியும் குழந்தை எதுவும் பிறக்காமல் தவிக்கலானாள். அவளுக்கு முன் குந்தி ஒரு குழந்தை யைப் பெற்றாள். ஆசிரம முனிவர்கள் குழந்தைக்கு யுதிஷ்டிரன் என்று பெய ரிட்டார்கள்.

பாண்டு தனக்கு பலமிக்க ஒரு புதல்வன் வேண்டுமெனக் குந்தியிடம் சொல்லவே அவள் வாயு தேவனை நினைத்து துர்வாசர் உபதேசித்த மந் திரத்தை உச்சரித்தாள். வாயுதேவ னின் அருளால் பீமன் பிறந்தான். குந்தி அக்குழந்தையைத் தன் மடியில் வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்த போது எங்கிருந்தோ ஒரு புலி வந் தது. அதைக் கண்டு குந்தி பயந்து சட்டென எழுந்தாள். அப்போது அக்குழந்தை அவள் மடியிலிருந்து நழுவ ஒரு பாறாங்கல்லின் மீது விழுந்தது. குழந்தைக்கு காயம் எது வும் ஏற்படவில்லை. ஆனால் அந்தப் பாறாங்கல்தான் நான்கு துண்டு களாக உடைந்து போயிற்று. இதைக் கண்டு யாரும் பிரமித்துப் போனார் கள்.

முனிவர்கள் . அக்குழந்தைக்கு





பீமன் என்று பெயர் வைத்தார்கள். உலகப் புகழ் பெறக் கூடிய ஒரு புதல்வன் வேண்டும் எனப் பாண்டு விரும்பவே குந்தி இந்திரனை நினைத்து மந்திரத்தை உச்சரித்தாள். இந்திரனின் அருளால் அவளுக்கு அர்ஜுனன் பிறந்தான்.

ஹஸ்தினாபுரத்தில் காந்தாரி நூறு புதல்வர்களுக்குத் தாயானாள் என்றால் சதசிருங்கத்தில் குந்தி மூன்று குழந்தைகளின் தாயானாள். பாண்டு மேலும் சில புதல்வர்களைக் குந்தி பெற்றாக வேண்டுமென விரும்பினாள். ஆனால் அதற்கு அவள் ஒப்பவில்லை. அப்போது மாத்ரி பாண்டுவிடம் "நானும் குந்தியைப் போலக் குழந்தைகளை அடைய வேண்டும். எனக்கு அந்த மந்திரத்தைச் சொல்லிக் கொடுக்கும்படி குந்தியிடம் சொல்லுங்கள்" என்றாள்.

பாண்டுவும் குந்தியிடம் மாத்ரியின் விருப்பத்தைத் தெரிவிக்கவே குந்தி அந்த மந்திரத்தைக் கூறினாள். மாத்ரி உடனே அசுவினி தேவர்களை நினைத்துக் கொண்டு அம்மந்திரத்தை உச்சரிக்கவே அவர்கள் தோன்றி அருள் புரிந்தனர். அதனால் அவளுக்கு நகுலன், சகாதேவன் என்ற இரட்டைக் குழந்தைகள் பிறந்தன.

மாத்ரி மேலும் குழந்தைகளைப் பெற ஆசைப்பட்டு குந்தியிடம் மீண்டும் மந்திரோபதேசம் செய்யச் சொன்னாள். ஆனால் குந்தியோ "நீ ஒரே சமயத்தில் இரு தேவர்களை நினைத்து மந்திரத்தை உச்சரித்தாய். அது தவறு. அதனால் இனியும் உபதேசிக்க மாட்டேன்" என்று கூறி மறுத்து விட்டாள்.

இவ்வாறு தேவர்களின் அருளால் பிறந்த ஐந்து குழந்தைகளையும் பார்த்துப் பார்த்து பாண்டு மகிழ்ந்து போனான். ஆசிரம வாசிகள் அனைவரும் அக்குழந்தைகளை அன்புடன் நேசித்தனர். வசுதேவன் தன் மருமகன்களுக்கு கசியபர் என்ற பிராம்மணர் வாயிலாகத் தங்க நகைகளையும் பட்டாடைகளையும் பல விளையாட்டு பொம்மைகளையும் அனுப்பினான்.

பாண்டு தன் குழந்தைகளுக்கு முறையே ஜாதகர்ணம், உபநயனம்

முதலியவற்றைச் செய்தான். அங்குள்ள முனிவர்கள் அவர்களுக்கு வேத சாஸ்திரங்களையும் கற்பித்தார்கள்.

ஒரு முறை குந்தி பிராம்மணர்களுக்கு விருந்து படைப்பதில் முனைந்திருந்தாள். அப்போது பாண்டு மாத்ரி தனியாக இருப்பது கண்டு அவளைச் சேரவே உடனேயே கிந்தமரின் சாபப்படி அவன் இறந்து போனான். அது கண்டு மாத்ரி 'ஓ'வென அழவே குந்தியும் முனிவர்களும் ஓடோடி வந்து என்னவென்று பார்த்தார்கள்.

மாத்ரி குந்தியிடம் நடந்ததைக் கூறிப் புலம்பினாள். குந்தியும் "ஐயோ மாத்ரீ! ஏமாந்து விட்டாயே. முனிவரின் சாபம் இருப்பதை நினைவில் கொண்டு நான் எச்சரிக்கையுடன் என் கணவரிடமிருந்து விலகி இருந்தேன். நீ ஏன் இப்படி நடந்து கொண்டாய்? இனிமேல் என்ன செய்ய முடியும்? நான் இவரது முதல் மனைவி. அதனால் இவரது உடலுடன் உடன்கட்டை ஏறுகிறேன்" என்றாள்.

மாத்ரியோ "இல்லை இல்லை தவறு செய்தவள் நான். என் கணவரையே காக்க இயலாத நான் உங்களை இழந்து குழந்தைகளைக் காக்க முடியுமா? எனவே நீங்கள் உயிருடன் இருந்து ஐவரையும் வளர்த்துப் பெரியவர்களாக்குங்கள். நான்தான் உடன்கட்டை ஏறுவேன்" எனக் கூறி எரியும் தன் கணவனின் சிதையில் குதித்து உயிர் நீத்தாள்.





இதற்குப் பின் சதசிருங்கபர்வ தத்திலிருந்து முனிவர்கள் குந்தியை யும் பாண்டவர்களையும் அழைத்துக் கொண்டும் பாண்டுவின் அஸ்திகளை எடுத்துக் கொண்டும் ஹஸ்தினாபுரத் திற்குச் சென்றார்கள். அவர் பீஷ்மரிட மும், திருதராஷ்டிரனிடமும் மற்றப் பிரமுகர்களிடமும் நடந்ததை எல்லாம் கூறினார்கள். பாண்டு இறந்தது கேட்டு யாவரும் மிகவும் துக்கப்பட் டார்கள். திருதராஷ்டிரனும் விதுர னும் இறந்தவர்கள் நற்கதி அடைய முறைப்படி ஈமச் சடங்குகளைச் செய்தனர்.

பாண்டு, மாத்ரி ஆகியோரின் அஸ்திகளை ஒரு பல்லக்கில் வைத்து எல்லா மரியாதைகளுடனும் ஊர்வல மாக எடுத்துச் சென்று கங்கையில் கரைத்தார்கள். பனிரெண்டு நாட்கள் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து விட்டு யாவரும் கங்கைக் கரையிலிருந்து ஹஸ்தினாபுரத்திற்கு வந்து சேர்ந்தார்கள்.

சத்தியவதி வியாசரின் அறிவுரைப் படி தன் மருமகள்களான அம்பிகை யையும் அம்பாலிகையையும் அழைத் துக் கொண்டு அரண்மனையை விட்டு வெளியேறித் தவம் புரியக் கானகத்திற்குச் சென்றாள். சிறிது காலத்திற்குப் பின் அம்மூவருடைய வாழ்க்கையும் கானகத்திலேயே முடி வுற்றது.

பாண்டவர்களும் கௌரவர்களும் ஒன்றாக திருதராஷ்டிரனிடமே வளர்ந்து வரலாயினர். சிறுவர்கள் ஒன்று கூடி விளையாடும் போதெல் லாம் பீமனின் கைதான் ஓங்கி நிற் கும். அவன் சிலரைப் பந்தாடினான். சிலரை பிடித்து உலுக்கித் தூக்கி எறிந்தான். இருவரைப் பிடித்து மோதி வேடிக்கை பார்த்தான். மரக் கிளைகளில் ஏற்றி தொங்க விட்டுக் கிளைகளை ஆட்டி அவர்களைக் கீழே விழ வைத்தான். எனவே பீமன் என்றாலே மற்ற சிறுவர்கள் நடுங்கலாயினர்.

பீமன் மிகவும் பலசாலியாக இருப் பது துரியோதனனுக்குப் பிடிக்க வில்லை. எனவே அவன் பீமனை எப்படியாவது ஒழிக்க வேண்டும் என எண்ணினான். கங்கைக் கரை

யில் பிரமாண கோடிஸ்தலம் என்ற இடம் இருந்தது. அங்கு நீரில் குதித்து விளையாடிப் படிக்கட்டுகள் கட்டப்பட்டும் நந்தவனங்கள் அமைக்கப்பட்டும் இருந்தன. ஒருநாள் அரச குமாரர்கள் யாவரும் உல்லாசமாகப் பொழுது போக்க அப்பகுதிக்குச் சென்றனர்.

அவர்கள் உண்ணப் பலவித தின்பண்டங்களும் குடிக்கப் பலவிதப் பானங்களும் தயாரிக்கப்பட்டன. துரியோதனன் பீமனுக்குக் கொடுக்கப்படும் தின்பண்டங்களில் மட்டும் விஷத்தைக் கலந்து விட்டான். அது தெரியாமல் பீமன் அவற்றை உண்டு மயங்கி விழுந்து விட்டான்.

துரியோதனன் யாருக்கும் தெரியாமல் அவனைத் தூக்கிக் கொண்டு போய் அவனது கை கால்களைக் கட்டி கங்கை நதியில் ஒரு ஆழமான மடுவில் தூக்கி எறிந்தான். பீமன் மடுவின் கீழே போய்ப் பாதாள லோகத்தை அடைந்தான்.

அங்கே அவனை விஷப்பாம்புகள் தீண்டின. அவனது உடலில் ஏற்கனவே விஷம் இருந்தால் இந்தப் புதிய விஷம் மாற்று மருந்து போலாகி பழைய விஷத்தின் தன்மையை முற்றிலும் போக்கடித்தது. பீமனுக்குத் தன் உணர்வு வரவே தன் கைகால்களை மடக்கி நீட்டினான். இதனால் அவனது கட்டுகள் பட்டென அறுந்து போயின.

இந்த விஷயம் பாம்புகளின் மன்னன் வாசுகிக்குத் தெரிந்தது. பீமன் தனது உறவினன் எனவும் தெரிந்து கொண்டான். பீமனின் தாய் குந்தியின் தகப்பன் சூரசேனன். அவன் வாசுகியின் தங்கையின் மகன். அதனால் அவன் பீமனைத் தன் மாளிகைக்கு அழைத்துப் போய் அவனுக்கு ஆயிரம் யானைகள் பலம் தரும் ரசத்தைக் கொடுத்துக் குடிக்க வைத்தான். பீமன் எட்டு பானை ரசத்தைப் பருகி மேலும் பலம் பெற்று சுகமாக இருந்தான்.





# வாய்ச்சொல் வீரனாகாதே!

கொடியூர் கிராமத்துப் பணக்கார வீட்டுப் பிள்ளை கோதண்டம். அவன் பட்டணத்திற்குப் போய்ப் படித்து விட்டு வந்ததிலிருந்து தன்னை விட்டால் அறிவாளி அந்த வட்டாரத்திலேயே கிடையாது என்று கூறிப் பெருமை அடித்து வந்தான்.

கோதண்டம் வேலை எதுவும் செய்யாமல் ஊர் சுற்றி வாய்ப் பந்தல் போட்டு எல்லோரையும் பேச விடாமல் அடக்கி வந்தான். ஒருநாள் அவன் தன் சகபாடிகளோடு ஊர்க் குளக்கரையில் உட்கார்ந்து வம்பளந்து கொண்டிருந்தான். அப்போது குப்புசாமி என்ற விவசாயி அவ்வழியே வரவே அவனைச் சீண்டிப் பார்க்க கோதண்டம் அவனைத் தன்னருகே அழைத்தான்.

குப்புசாமியும் "என்ன சமாசாரம்? இந்த உன் கோஷ்டியில் என்னை ஏன் இழுக்கிறாய்?" என்று கேட்டான். கோதண்டமும் "ஒன்றுமில்லை. ஒரு சாதாரணக் கேள்விக்கு உனக்கு பதில் தெரிகிறதா என்று பார்க்கத் தான். ஒரு பெரிய கல்லைத் தூக்கித் தண்ணீரில் போட்டால் அது ஏன் அமிழ்ந்து கீழே போய் விடுகிறது?" என்று கேட்டான்.

குப்புசாமியும் "கல் சிறிதோ அல்லது பெரிதோ எப்படி இருந்தாலும் அத்தண்ணீரில் போட்டால் அது அமிழ்ந்து கீழே போய் விடும். ஏனென்றால் கல்லுக்கு நீந்தத் தெரியாது" என்றான் அலட்சியமாக கோதண்டமோ "நீ சொன்னது தப்பு" எனவே குப்புசாமியும் "நான் சொல்வது சரியே. ஒரு பாராங்கல் அளவுள்ள மீனைத் தூக்கித் தண்ணீரில் போட்டால் அது நீரில் அமுங்கிக் கீழே போய் விடுமா?" என்று கேட்டான். கோதண்டமும் "போகாது. ஏனென்றால் அதற்கு நீந்தத் தெரியும்"

-சங்கர சுவாமிநாதன்-

என்றான்.

அப்போது குப்புசாமி சிரித்து "நான் சொன்னதை இப்போது ஒப்புக் கொண்டு விட்டாய். மீனுக்கு நீந்தத் தெரியும். அதனால் அது நீரில் முழுகிப் போகாது. கல்லுக்கு நீந்தத் தெரியாது. அதனால் அது நீரில் அமுங்கிக் கீழே போய் விடும். தெரிந்ததா?"என்றான்.

கோதண்டம் திக்குமுக்காடிப் போனான். பிறகு அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டு "நீ சொல்லும் காரணம் சரியல்ல. இயற்கை நூல் களைப் படித்தால் ஆர்க்கிமிடிசின் கொள்கை, நியூட்டனின் சித்தாந்தம் என்பதெல்லாம் தெரியும். ஒன்று மிதப்பது பற்றியது. மற்றது புவி ஈர்ப்புத் தன்மை பற்றியது. இதெல் லாம் படிக்காத உனக்கு என்ன தெரியப் போகிறது?" என்றான் ஏளனமாக.

குப்புசாமியோ "நானோ வயலில் உழைப்பவன். உன் மாதிரி வெட்டிப் பேச்சு பேசித் திரிபவன் அல்ல. எனக்கு நீரில் கல்லைப் போட்டால் அமிழ்ந்து கீழே போய் விடும் என்றும் மீனை நீரில் விட்டால் அது அமிழா மல் நீந்திக் கொண்டிருக்கும் என்கிற அளவுக்கு அறிவு இருக்கிறது. அது போதும். உன் போன்ற வேலை வெட்டி இல்லாதவர்கள் தாம் அந்தக் கொள்கை, இந்த சித்தாந்தம் என்று கூறி இல்லாததை இருப்பது போல வும் இருப்பதை இல்லாதது போல வும் கூறி வாய் வார்த்தைகளால் நிரூபிக்கப் பார்ப்பார்கள். இப்படி வெட்டியாக வேலை செய்யாமல் இருக்கச் செய்யும் உன் படிப்பு எனக்கு வேண்டாம்" என்றவாறே அங்கிருந்து சென்று விட்டான்.

கோதண்டத்திற்குக் குப்புசாமி கூறி யது நன்கு உறைத்தது. அப்போது முதல் வெட்டிப் பேச்சு பேசுவதை விட்டுத் தனக்குள்ள நிலங்களில் விவசாயம் செய்வதில் கோதண்டம் முடைந்து விட்டான். இப்போது அவனைச் சுற்றி 'ஜால்ரா' போடும் பத்து பேர் இல்லைதான்.





# மாயப் பெட்டி

ரங்கன் இளைஞன். மிகவும் நல்லவன். பணக்கார வீட்டுப் பையன். சிறுவயதில் தாயை இழந்துவிட்ட அவனை அவனது தந்தைதான் செல்லமாக வளர்த்து வந்தார். தான் மறுமணம் செய்து கொண்டால் ரங்கன் மாற்றாந்தாய்க் கொடுமைக்கு ஆளாவானோ என அஞ்சி அவர் மறுமணம் செய்து கொள்ளவில்லை.

ரங்கனின் நல்ல குணத்தைப் பயன்படுத்திக் கொண்டு ஊரார் அவனை ஏமாற்றலாயினர். ரங்கனோ யார் எதைச் சொன்னாலும் நம்பி உதவுவான். இப்படியே அவன் ஏமாந்த சோணகிரியாக இருந்து வந்தான்.

ஒருநாள் ஒரு சாது ரங்கனைப் பார்த்து அவனை வெகுவாகப் புகழ்ந்தார். அப்போது ரங்கனின் தந்தை அருகே இருந்தார். அவரது முகம் வாட்டமுற்றதைக் கண்ட அந்த சாது ரங்கனை வெளியே அனுப்பிவிட்டு அவனது தந்தையிடம் "உன் மகன் நல்லவனே. நீ ஏன் கவலைப்படுகிறாய்?" என்று கேட்டார்.

ரங்கனின் தந்தையும் "என் மகன் நல்லவனே. ஆனால் ஒரு அப்பாவி. அதனால் அவனை எல்லோரும் ஏமாற்றுகிறார்கள். நான் இறந்த பிறகு அவன் கதி என்னவாகுமோ என்றே பயப்படுகிறேன். அவன் இப்படி ஒரேயடியாக எல்லோரையும் நம்பிவிடக் கூடாது என்று எடுத்துச் சொல்லியும் வருகிறேன். ஆனால் அவன் காதில் ஏறவில்லை. இப்போது நீங்கள் வேறு அவனைப் புகழ்ந்து விட்டதால் இனி என் பேச்சைக் கேட்பானா என்ன?" என்றார்.

சாதுவும் "கவலைப்படாதே. உலகில் உன் மகனைப் போலக் கிடைத்தல் அரிது. இப்படிப்பட்டவர்களை மாற்ற முயல்வதே தவறு. உன்

-சிவனார் செல்வன்-



கனுக்கு உலக அனுபவம் தேவை. அவனை என்னிடம் அனுப்பு. உன் கவலை அப்போது மறைந்து விடும்" என்றார்.

ரங்கனின் தந்தை சற்று யோசிக்கவே சாதுவும் "இப்போது நான் தீர்த்த யாத்திரை போய்க் கொண்டிருக்கிறேன். நான் தாமரைக் குளத்திலுள்ள என் ஆசிரமத்திற்குத் திரும்பி வர சில மாதங்களாகும். அதனால் நீ உன் மகனை நான் வந்த பிறகு என் ஆசிரமத்திற்கு அனுப்பு" என்று சொல்லி விட்டு ரங்கனை அழைத்து சில உபதேசங்கள் செய்தார்.

அவர் அவனிடம் "இதோ பார்! நீ நல்லவர்களுக்கே உதவ வேண்டும். கெட்டவர்களுக்கு நீ உதவினால் அது உனக்கே கெடுதல்" என்றார்.

ரங்கனும் "நீங்கள் கூறுவது போல் நடக்கிறேன். ஆனால் கெட்டவர்களை எப்படிக் கண்டுபிடிப்பது?" என்று கேட்டான். சாது அவன் தலைமீது கையை வைத்து ஆசீர்வதித்து "இன்று முதல் கெட்டதெல்லாம் உன்னை விட்டு தூரத்தில் இருக்கும். உன்னை யாரும் ஏமாற்ற மாட்டார்கள். என் ஆசீர்வாதம் உன்னை இரண்டு ஆண்டுகளுக்குக் காக்கும். அதற்குப் பின் என் ஆசிரமத்திற்கு வா. அப்போது கெட்டதை எப்படிக் காண்பது என்பதைக் கற்றுத் தருகிறேன்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

அதற்குப் பின் யாருமே ரங்கனிடம் வந்து எதுவும் கேட்கவில்லை. இது பற்றி ரங்கன் கவலைப்பட்ட போது அவனது தந்தை "இது அந்த சாதுவின் சக்தி. கெட்டவர்களை உன்னிடமிருந்து அப்புறப்படுத்தியுள்ளது" என்றார்.

இரண்டு ஆண்டுகள் கழிந்தன. ரங்கனின் தந்தையும் படுத்த படுக்கையாகக் கிடந்தார். அவர் ரங்கனை அழைத்து "இனிமேல் நான் அதிக நாட்கள் இருக்க மாட்டேன். இந்த வீடு முப்பதாயிரம் வராகன்கள் பெறும். இந்த விலையை யார் கொடுத்தாலும் பணத்தை வாங்கிக் கொண்டு வீட்டை அவரிடம் கொடு. கிடைத்த பணத்துடன் நீ தாமரைக் குளத்திற்குப் போய் சாதுவின் ஆசிரமத்தில் போய் இருந்து அவர்

சொல்கிறபடி நட. அங்கு போய்ச் சேரும் வரை யாரையும் நம்பாதே" என்றார்.

இதற்கு ஒரு வாரத்திற்குப் பின் ரங்கனின் தந்தை இறந்து போனார். ரங்கனும் வந்த உறவினர்களிடம் தன் தந்தை கூறியதைச் சொன்னான். ஒரு பணக்காரன் உடனே முப்பதாயிரம் வராகன்களை ரங்கனிடம் கொடுத்து வீட்டை வாங்கிக் கொண்டான்.

அப்போது ரங்கனின் நண்பன் பசுபதி என்பவன் வந்து "ரங்கா! நீ இவ்வளவு பணத்தையும் மூட்டை கட்டி எடுத்துப் போனால் திருடர்களுக்கு பயப்பட வேண்டும். எனக்குத் தெரிந்த ஒரு வியாபாரியிடம் முப்பதாயிரம் வராகன் மதிப்புள்ள ஒரு வைரம் உள்ளது. அதை நீ வாங்கிக் கொள். பயமில்லாமல் மடியில் கட்டி எடுத்துக் கொண்டு எங்கு வேண்டுமானாலும் செல்லலாம்" என்றான்.

பசுபதி கூறிய நகை வியாபாரி நாகய்யனிடம் அப்படி ஒரு வைரம் உண்மையில் இருக்கத்தான் இருந்தது. ஆனால் ஒரு போலி வைரத்தை ரங்கனின் தலையில் கட்டி அவனிடமுள்ள பணத்தைப் பறித்துக் கொள்ளவே அவன் பசுபதியை ரங்கனிடம் அனுப்பினான். ஆனால் நாகய்யனும் பசுபதியும் ரகசியமாகப் பேசியதை நகை வியாபாரியின் மகள் நளினி கேட்டு விட்டாள்.



நளினி ரங்கனை மிகவும் விரும்பினாள். அவனை மணக்கவும் அவள் எண்ணினாள். ஆனால் தந்தை அதற்கு இசைய மாட்டார் என்பது அவளுக்குத் தெரியும். ரங்கன் பணத்தோடு வைரத்தை வாங்க நாகய்யன் வீட்டிற்கு வந்தான். நாகய்யனும் பணத்தை வாங்கி நளினியிடம் கொடுத்து இரும்புப் பெட்டியில் வைக்கச் சொன்னான்.

நளினி இரும்புப் பெட்டியிலிருந்த வைரங்களில் முப்பதை எடுத்தாள். அவை ஒவ்வொன்றும் ஆயிரம் வராகன் மதிப்புள்ளவை. அவற்றை ஒரு பையில் போட்டு ஒரு கடிதம் எழுதி அதையும் அதில் வைத்து ரகசியமாக ரங்கனிடம் கொடுத்தாள். நாகய்யன்

தன் மனைவியிடம் "அந்த முப்பதாயிர வராகன் பெறும் வைரம் என் பெட்டியில் உள்ளது. எடுத்து வா" என்றான்.

பெட்டியிலுள்ளது போலி வைரம் என நாகய்யன் மனைவிக்குத் தெரியும். அசல் வைரம் உள்ள இடமும் அவளுக்குத் தெரியும். அதனால் ரங்கன் ஏமாறக்கூடாது என எண்ணி அவள் போலி வைரத்தை எடுத்து அசல் வைரம் உள்ள இடத்தில் வைத்துவிட்டு அசல் வைரத்தை எடுத்து வந்து ரங்கனிடம் கொடுத்தாள்.

நளினி ஏதோ சாப்பாட்டு மூட்டை கொடுத்திருக்கிறாள் என எண்ணி ரங்கன் அதை தாமரை குளத்திற்குப் போகும் வழியில் பிரித்து சாப்பிட்டுக் கொள்ளலாம் என்று எண்ணினான். அவன் நாகய்யன் மனைவி கொடுத்த வைரத்தையும் நளினி கொடுத்த மூட்டையையும் எடுத்துக் கொண்டு தன் வீட்டை அடைந்தான்.

நளினி என்ன சாதம் கட்டிக் கொடுத்திருக்கிறாள் என்று பார்க்க அவள் கொடுத்த பையை ரங்கன் பிரித்தான். அதில் முப்பது வைரக் கற்களும் ஒரு கடிதமும் இருந்தது கண்டு அவன் ஆச்சரியப்பட்டான். கடிதத்தை எடுத்துப் படித்தான். அதில் "என் தந்தை போலி வைரம் கொடுத்து உங்களை ஏமாற்றியுள்ளார். நான் இதில் முப்பாதாயிரம் வராகன் மதிப்புள்ள முப்பது வைரக் கற்களை வைத்துள்ளேன். உங்களுக்கு நஷ்டமில்லை. நீங்கள் ஆசிர



மத்திலிருந்து திரும்பி வரும் வரை உங்களுக்காகக் காத்திருப்பேன். இப்படிக்கு நளினி" என எழுதப்பட்டிருந்தது.

ரங்கன் ஒரு பெட்டியில் தன் சாமான்களை எடுத்து வைத்துக் கொண்டு தாமரைக் குள ஆசிரமத்திற்குக் கிளம்பினான். வழியில் ஒரு பயணியோடு சேர்ந்து சென்றான். அந்தப் பயணி மோசக்காரன். அதை அறியாமல் தன்னைப் பற்றிய விவரங்களை எல்லாம் ரங்கன் அவனிடம் கூறிவிட்டான். இருவரும் ஒரு மரத்தடியே தங்கினர்.

ரங்கன் தான் படுத்துத் தூங்கப் போவதாகவும் தன் பெட்டியை பத்திரமாகப் பார்த்துக் கொள்ளும்படியும் அப்பயணியிடம் கூறிவிட்டுக் கண்ணயர்ந்தான். அவன் தூங்கி எழுந்து பார்த்தபோது பயணியும் இருக்கவில்லை. அவனது பெட்டியும் காணவில்லை. அந்தப் பயணி தன்னை ஏமாற்றி விட்டான் என ரங்கன் அறிந்து தன்னிடம் இருந்ததெல்லாம் போயிற்றே என வருந்தினான். பிறகு எழுந்து அவன் தாமரைக் குளம் நோக்கிச் சென்றான்.

ரங்கனின் பெட்டியை திருடிச் சென்ற பயணி கொஞ்ச தூரம் போய்ப் பெட்டியைத் திறந்து பார்த்தான். அதில் நல்லபாம்பு ஒன்றுதான் சுருண்டு இருந்தது. அவன் சட்டென பெட்டியை மூடி எடுத்துக் கொண்டு அவன் தனக்கு தெரிந்த ஒரு பாம்பாட்டியிடம் சென்றான். பாம்பாட்டியும் பயணி சொன்னதைக் கேட்டு





"இதிலுள்ள பாம்பின் தலையில் நாக மணி இருக்கும். அதை எடுத்து அரண்மனைக்குப் போய் இளவரசனின் தலை மீது வைத்து அவனை குணப்படுத்தி மன்னன் அறிவித்தபடி பாதி நாட்டைப் பெறுவேன்" என எண்ணினான்.

அவன் தான் நாகபூஜை செய்து இரண்டு நாட்களுக்குப் பிறகு நாக மணியை எடுத்துப் பயணிக்கு கொடுப்பதாகக் கூறி அனுப்பினான். அதன்பின் அதேபோன்ற ஒரு பெட்டியை அந்தப் பாம்பாட்டி செய்து அதில் ஒரு செத்த பாம்பைப் போட்டான். இரண்டு நாட்கள் கழிந்ததும் பயணி வரவே அவன் அப்பெட்டியைக் கொடுத்து "நீ இப்பெட்டியை உன் வீட்டிற்கு எடுத்துப் போய் திறந்தால் அதில் செத்த பாம்பும் நாகமணியும் இருக்கும் என நாக தேவதை கூறியது. நான் இதைத் திறந்து பார்க்கக் கூடாதாம்" என்றான்.

பயணியும் பாம்பாட்டிக்கு பூஜை செலவுக்காகப் பத்து வராகன்களைக் கொடுத்து விட்டு பெட்டியை வாங்கிக் கொண்டு போனான். பயணி போனதும் பாம்பாட்டி தான் மறைத்து வைத்த பெட்டியை எடுத்துத் திறந்தான். அதில் பாம்பிற்கு பதிலாக ஏதோ ஓலைச் சுவடிகள் இருப்பது கண்டு திகைத்துப் போனான். ஆனாலும் சமாளித்துக் கொண்டு அந்த ஓலைச் சுவடிகளில் என்ன எழுதி இருக்கிறது எனக் கண்டறிய அவன் அந்த பெட்டியை எடுத்துக் கொண்டு தனக்குத் தெரிந்த ஒரு பண்டிதரின் வீட்டை அடைந்தான்.

பண்டிதர் பெட்டியைத் திறந்து ஓலைச் சுவடிகளைப் படித்து விட்டு அது ஒரு அற்புதமாக காவியம் எனத் தெரிந்து கொண்டார். அதை மன்னனுக்குச் சமர்ப்பித்தால் தனக்கு நிறையப் பணம் கிடைக்கும் என அவர் நினைத்தார். எனவே பாம்பாட்டியிடம் அவர் "இதில் யாரோ எழுத்துக்களை எழுதிப் பழகி இருக்கிறான். ஒவ்வொரு ஓலையிலும் அ ஆ இ ஈ உ ஊ என்றுதான் இருக்கிறது" என்று கூறி "எனக்கு இந்தப் பெட்டி

பிடித்து போயிற்று. இதை எனக்குக் கொடுத்துவிட்டு இருபது வராகன்கள் வாங்கிக் கொள்" என்றார். பாம்பாட்டியும் சம்மதித்து இருபது வராகன்களை வாங்கிக் கொண்டு பெட்டியையும் ஓலைச் சுவடியையும் அவருக்குக் கொடுத்துவிட்டுப் போனான்.

அவன் போனதும் பண்டிதர் பெட்டியை எடுத்துக் கொண்டு தலைநகருக்குப் போய் ஒரு சத்திரத்தில் தங்கினார். அன்றிரவு அவர் அயர்ந்து தூங்கும்போது ஒரு திருடன் அப்பெட்டியைத் திருடிக் கொண்டு போய் அதனைத் திறந்து பார்த்தான். அதில் தங்க நாணயங்கள் இருப்பது போல அவனுக்குத் தென்பட்டது. அதை மூடி எடுத்துக் கொண்டு போன போது அவன் அரசாங்கக் காவல் வீரர்களிடம் அகப்பட்டுக் கொண்டான்.

காவல் வீரர்கள் அப்பெட்டியைத் திறந்து பார்த்தபோது அதில் துண்டிக்கப்பட்ட ஒரு மனிதத் தலை இருக்கக் கண்டனர். அது அரசகுமாரன் தலை போலிருக்கவே அவர்கள் அத்திருடனை இழுத்துக் கொண்டு பெட்டியுடன் அரண்மனை அந்தப்புரத்திற்குச் சென்றார்கள்.

இதற்குள் ரங்கன் தாமரைக் குள ஆசிரமத்தை அடைந்து விட்டான். அங்கு அவன் கண்ட சாது முன் போலில்லாமல் இளைத்துத் துரும்பாகப் போய் விட்டதைக் கண்டான்.



அவரும் "சரியான சமயத்தில் வந்தாய். இளவரசனை நோயிலிருந்து விடுவிக்க நாகமணியும் அதற்கான மந்திர ஓலையும் என்னிடம் உள்ளது. நீ அவற்றை எடுத்துப் போய் உபயோகித்து பாதி நாட்டை அடையலாம். வா என்னுடன்" என்று கூறி அவனை அழைத்துக் கொண்டு தலைநகருக்குச் சென்றார்.

மன்னன் சாதுவையும் ரங்கனையும் மரியாதையுடன் வரவேற்றான். சாது நாகமணியை இளவரசனின் தலையில் வைத்து ஓலையிலிருந்த மந்திரத்தை ஓதினார். அப்போது இளவரசனின் தலைவேறாகி மறைந்து. அவனது உடல் மட்டும் இருந்தது.

அதைக் கண்ட மன்னன் கோபம்

கொண்டு சாதுவை அடிக்க வரவே அவரும் "பொறு மன்னா! அங்கே பார்" என்றார். அப்போது காவல் வீரர்கள் திருடனைப் பெட்டியோடு அழைத்து வந்தார்கள். பெட்டியைக் கீழே வைத்து அவர்கள் திறக்கப் போனபோது சாதுவுடன் இருந்த ரங்கன் "அது என் பெட்டி" என்று கூறி அதிலிருந்து தன் பொருள்களை எடுத்து வைத்தான். இதே சமயம் அரசகுமாரன் தூங்கி எழுந்தவன் போல எழுந்து உட்கார்ந்தான்.

அதுகண்டு மன்னன் மகிழ்ந்து போனான். தான் கூறியபடி சாதுவுக்குப் பாதி நாட்டை அவன் அளித்தான். சாது அதை ரங்கனுக்குக் கொடுத்தார். அவனோ மன்னனிடம் அதைக் கொடுத்து "அரசனாக இருக்க எனக்குத் தகுதி இல்லை" என்று பணிவுடன் கூறினான்.

மன்னனும் சாதுவைப் பார்க்கவே அவரும் "இவனுக்கு இந்தப் பெட்டி நிறையத் தங்க நாணயங்களைக் கொடுத்து பாதுகாப்போடு இவனை இவனது ஊருக்கு அனுப்பி வை" என்றார். அப்போது ரங்கன் சாதுவிடம் ""சுவாமி! தாங்கள் எனக்கு உலகை அறிய வைப்பதாகக் கூறினீர்களே, இப்போது எப்படி என் ஊருக்குப் போவது? என்று கேட்டான்.

சாதுவும் "கவலைப்படாதே. அனுபவ ஞானம் கற்றால் வராது. நல்ல இயல்பு மிதமிஞ்சி விட்டால் அனுபவ ஞானமும் பயன்படாது. இப்போது உனக்கு ஏராளமான பணமும் அரசின் பாதுகாப்பும் உள்ளது. உன்னை மணக்க விரும்பும் நளினிக்கு அனுபவ ஞானம் உள்ளது. அவளை நீ மணந்து கொண்டு அவள் சொற்படி நட. உன்னைக் காப்பாற்ற என் சக்தி எல்லாம் தீர்ந்து விட்டது. அதனால் நான் இளைத்துப் போய் விட்டேன். இனி நீயே உன் காலில் நிற்க வேண்டும்" என்றார்.

ரங்கனும் சாது கூறியபடியே நடந்து நளினியை மணந்து கொண்டு புத்திசாலித்தனமாக வாழ்ந்து வரலானான்.



# இயற்கை விநோதங்கள்

## முதல் குரங்கு



மடகாஸ்கர் லேமூர் என்ற இக்குரங்கை 1790ல் கண்டார்கள். சிறிய உருவில் வாலில் அடர்ந்த ரோமம் கொண்டு பெரிய கண்களும் உள்ளது கண்டு முதலில் இது அணில் என்று நினைத்து விட்டார்கள். ஆனால் இது ஒரு வகைக் குரங்கு. இது தன் கைகளின் கூரான விரலால் மரப் பட்டைகளைக் கீறி அவற்றிலுள்ள புழுக்களைத் தின்கிறது. இது புழுக்களைத் தவிர வேறெதையும் உணவாகக் கொள்ளாததால் மிக அரிதாக உள்ளது.

## கழுகுகளின் பொறுமை!



அமெரிக்காவிலுள்ள 'எவர்க்ளேட் கைட்' எனப்படும் குழுகுகளுக்கு நத்தைகளே உணவாம். நத்தைகள் தம் ஓடுகளிலிருந்து வெளியே வரும்போது இக்கழுகுகள் சட்டெனப் பாய்ந்து அவற்றைத் தின்கின்றன. வளைந்துள்ள இவற்றின் அலகு மிக உறுதியானது. ஆனால் நத்தையை அதன் கூட்டிலிருந்து எடுக்கப் பயன்படாது. அதனால்தான் நத்தை வெளியே வரும் வரை இது பொறுமையாகக் காத்துக் கொண்டிருக்கிறது.

## கும்பல் கரையான்!



மரங்களையும் காகிதங்களையும் அரிக்கும் வெள்ளைக் கறையான் கும்பல்களைப் பார்த்திருப்பீர்கள். இவற்றைப் பரிசோதித்துப் பார்த்தால் இவை எறும்பு வகையல்ல என்பது தெரியும். பெரிய புற்றுகளை வைக்கும் இவை பூமிக்குள் வாழ்கின்றன. வளர்ந்து இறக்கைகளுடன் பறந்து போகின்றன. இவை தமக்கு கூட்டாளியைச் சேர்த்துக் கொண்டு தம் இருப்பிடங்களை அமைத்துக் கொள்கின்றன. இவை உலகங்கிலும் உள்ளன.

Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!



# போட்டோ வாக்கியப் போட்டி : : பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1995 பிப்ரவரி மாத இதழில் வெளியிடப்படும்**



S.G. Seshagiri



Devidas Kasbekar

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் ★ டிசம்பர் 10-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை - 600026**

---

## அக்டோபர் மாதப் போட்டி முடிவு

| | |
|---|---|
| முதலாவது போட்டோ | : **துடிக்கும் கரத்தில் தோன்றும் எதிர்காலம்** |
| இரண்டாவது போட்டோ | : **துள்ளும் விரலில் தோன்றும் நிகழ்காலம்** |
| பரிசு பெற்றவர் | : **திரு கே. ஜகந்நாதன், சேலம் - 15.** |




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**


இதை மிஞ்ச முடியுமா!
PARLE
big chief
நீங்கள்
பிக் சீஃப்
ஆக விரும்புகிறீர்களா ?
அப்படியானால், உங்கள்
முகவரியுடன் பிக் சீஃப்
டாஃபியின் 10
மேலுறைகளை எங்களுக்கு
உடனே அனுப்பி, பிக் சீஃப்
ஆவதற்கான இரகசியத்தை
விளக்கும் ஒரு புத்தகத்தைப்
பெறுங்கள்.
சென்னை - 600 018
புதிய
PARLE
big chief
பழங்களின் சுவை கொண்ட டாஃபி
வாழைப்பழம் ♦ மேங்கோ ♦ ஆரஞ்சு
everest/94/PP/72